


# அம்புலிமாமா


நிறுவனர்: 'சக்கரபாணி'

நிர்வாக ஆசிரியர்: நாகிரெட்டி


---

நேயர்களுக்கும் எமது அன்பர்களுக்கும் புத்தாண்டு வாழ்த்துக்கள்.

அன்புடன் கொண்ட உடல் உடையவனே உயிரியவன். அப்படி அன்பு கொள்ளாதவனின் உடல் எலும்புக் கூட்டின் மீது தோல் போர்த்தப்பட்ட உயிரற்ற உடலுக்குச் சமம். இதனைத்தான் வள்ளுவர்,

**அன்பின் வழியது உயர்நிலை அஃதிலார்க்கு**
**என்புதோல் போர்த்த உடம்பு**

எனக் கூறி அன்பின் மேன்மையைக் கூறியுள்ளார். எனவே நாம் இக்கருத்தினை ஏற்று எல்லோரிடமும் அன்பு கொள்வோமாக.

உயர்ந்த மனிதர்கள் சுகம் அடைவது இரு விதங்களில். ஒன்று எல்லாவற்றையும் விட்டு விடுவது. மற்றது எல்லாச் செல்வங்களையும் அடைவது. இதைத்தான் இந்த சுலோகம் அறிவிக்கிறது.

**பும்சாம் உன்னத சித்தானாம் த்வயமேவ சுகாவஹம்**
**சர்வசங்க நிவிர்த்திர்வா விபூதிர்வா சவிஸ்தரா.**

---


மதிமுகம்: 66 ஜனவரி 1980 புன்னகை: 1

தனிப் பிரதி: ரூ. 1-50 வருட சந்தா: ரூ. 18-00



# கேள்வியும் பதிலும்

ஏ. மதன்குமார், பரம்புரம்.

கேள்வி: பயம் ஏற்படும் போது இருதயம் வேகமாகத் துடிக்கக் காரணம் என்ன?

பதில்: மனித உடலில் சதை, எலும்புகள் உள்ளன. இவற்றின் இரு புறங்களிலும் 'எட்ரினலின்' எனப்படும் சுரப்பிகள் உள்ளன. பயம் ஏற்படும் போது இந்த சுரப்பிகள் 'ஏபினெப்ரின்' என்ற திரவத்தை வெளியே விட்டு ரத்தத்தில் கலக்கச் செய்கின்றன. இதனால் தோல் மீது வியர்வை வருவதும் இரத்த அழுத்தம் அதிகமாகி இருதயம் 'பட' 'பட'வென்று அடித்துக் கொள்வதும் நிகழ்கிறது. இவ்விதமாக பயம் ஏற்படும் போது நம் உடலில் ஏற்படும் அசைவுகளால் இருதயம் அடித்துக் கொள்வதைக் காணலாம்.

வி. கேசவநாராயணன், வியாசர்பாடி.

கேள்வி; சூரியனைச் சுற்றிலும் கிரகங்கள் பல உள்ளனவே. இந்தக் கிரகங்கள் எல்லாம் சூரியனின் ஒரே பக்கத்தில் இருந்தால் என்ன ஆகும்?

பதில்: கிரகங்கள் ஒன்று சேர்வது பற்றி பல முறைகளில் பலர் கூறக் கேட்டிருக்கலாம். நூற்று எண்பது ஆண்டுகளுக்கு ஒரு முறை கிரகங்கள் எல்லாம் சூரியனின் ஒரே பக்கத்தில் வந்து சேர்வது நிகழ்கிறது. எனவே இப்படிப்பட்ட சேர்க்கையால் எதுவும் குறிப்பிடத்தக்கபடி நிகழ்ந்ததில்லை. நிகழ்வது இல்லை. அந்தக் கிரகங்கள் அப்படி ஒரு குறித்த நாளில் ஒன்று சேர்வது ஒன்றுதான் குறிப்பிடப்பட வேண்டிய 'சிறப்பு நிகழ்ச்சி. இதனால் பலர் கூறுவது போல கடல் கொந்தளிப்போ, பூகம்பமோ ஏற்படுவது என்பதெல்லாம் கிடையாது. எனவே இப்படிக் கிரகங்கள் ஒன்று சேர்வதால் எவ்வித நல்ல பலனோ அல்லது கெட்ட பலனோ ஏற்படுவது இல்லை என்பதை நன்கு அறியலாம். ஆனாலும் இப்போதும் பலர் கிரகங்கள் ஒன்று சேரும் நாளில் ஏதாவது விபரீதம் நடக்குமோ எனப் பயந்து பரிகாரம் செய்வதைக் காணலாம்.




கிழக் குரங்கு வெகு நேரம் வரை துக்கப்பட்டு "என் பேச்சைக் குரங்குகள் கேட்டிருந்தால் இப்படி இறக்க வேண்டி இருந்திராதே. ஆனாலும் இந்த மன்னன் செய்த இந்த அநியாயத்திற்குப் பழிக்குப் பழி வாங்குகிறேன்" எனத் தீர்மானித்துக் கொண்டது.

அரசனைப் பழி வாங்க என்ன செய்வது என்று யோசித்தவாறே அது காடு முழுவதும் திரிந்தது. அதற்கு எவ்வித வழியும் தெரியவில்லை. அதற்கு தாகம் எடுக்கவே சற்று தூரத்திலுள்ள நீர் மடுவைப் பார்த்து அங்கு போய் தண்ணீர் குடிக்க நினைத்தது. ஆனால் அந்த அமைதி நிறைந்த பகுதியைப் பார்த்ததும் அதன் மனதில் ஏதோ ஒருவகை பயமும் சந்தேகமும் தோன்றலாயிற்று. அந்தத் தண்ணீரில் விஷம் கலந்து இருக்குமோ என்றும் அது சந்தேகப்பட்டது. எனவே சுற்றிலும் தரையிலும் அது கவனமாகப் பார்த்தது.

அப்போது மடுவை நோக்கிப் பல அடிச் சுவடிகள் போனதைக் குறிக்க இருந்தன. ஆனால் அங்கிருந்து திரும்பி வந்த அடிச்சுவடு ஒன்று கூடக் காணோம். அப்போது குரங்கு "இந்த மடுவில் முதலைகள் இருக்கின்றன போலும். அதனால் தான் இங்கே நீர் குடிக்கப் போன பிராணிகள் உயிருடன் திரும்பி வரவில்லை. எனவே நான் இவ்வழியே போகாமல் இதனருகே உள்ள மரக் கிளையிலிருந்தவாறே ஒரு தாமரைத் தண்டை எடுத்து நீரை அதன் வழியாக உறிஞ்சிக் குடிக்கிறேன்" என எண்ணிக் கொண்டது. அது அவ்வாறே மரத்தின் மீது ஏறித் தாமரைத் தண்டின்



அப்போது குரங்கு சட்டென ஏதோ நினைத்துக் கொண்டு ''நீ ஒரே தடவையில் எவ்வளவு பேர்களைச் சாப்பிடுவாய்?'' என்று கேட்டது. அந்த யட்சப் பெண்ணும் ''எவ்வளவு பிராணிகளானுலும் இந்த நீர் மடுவில் அடி எடுத்து வைத்தால் எல்லாவற்றையும் ஒரே சமயத்தில் விழுங்கி விடுவேன். ஆனுல் இங்கிருந்து நான் வெளியே வந்து விட்டால் அந்த சக்தி எனக்குக் கிடையாது'' என்ருள்.

குரங்கும் ''அப்படியா? என் விரோதி சந்திரன் என்ற மன்னனும் அவனது ஆட்களுமே. உன் கழுத்திலுள்ள வைரமாலையை மட்டும் எனக்குக் கொடுத்தால் அவர்களையெல்லாம் இங்கு அழைத்து வந்து உனக்கு உணவாகக் கொடுப்பேன்'' என்றது.

யட்சப் பெண்ணும் அது கேட்டு மகிழ்ந்து ''பேஷ். இந்தா வைர மாலை. அந்த அரசனையும் அவனது ஆட்களையும் அழைத்து வந்து இங்கே விடு. எவ்வளவு பேர்கள் இருந்தாலும் நான் அவர்களை ஒரேயடியாக விழுங்கி விடுகிறேன்" எனக் கூறித் தன் கழுத்திலுள்ள மாலையைக் கழற்றிக் குரங்கிடம் கொடுத்தாள்.

கிழக் குரங்கு வைரமாலையை அணிந்து சந்திரனின் அரண்மனைக்

வழியாக நீரை உறிஞ்சிக் குடித்தது. அப்போது ஒரு யட்சப் பெண் நீர் மட்டத்திலிருந்து தலையைத் தூக்கினுள். அதன் கழுத்தில் பளபளவென்று வைரமாலை மின்னியது. அந்தப் பெண் குரங்கிடம் ''இந்த நீர் மடுவில் நீர் குடிக்க வரும் பிராணிகளை எல்லாம் நான் பிடித்து விழுங்கி விடுவேன். நீ புத்திசாலி. இங்கு வராமல் உயர மரத்தின் மீதிருந்து தண்ணீர் குடித்து விட்டாய். பேஷ். நீ கூரிய அறிவு படைத்தவன். மிகவும் கெட்டிக்காரன். எனவே நான் உன்னைப் பாராட்டுகிறேன். உனக்கு என்ன வரம் வேண்டும்?'' என்று கேட்டாள்.

குள் சென்றது. மன்னனும் அவனது ஆட்களும் அதைப் பார்த்து ''ஆகா! குரங்கு மன்னனே! நீ எங்கே போயிருந்தாய்? திரும்பி வந்துவிட்டாயா! பேஷ். உனக்கு இந்த விலையுயர்ந்த அபூர்வ மாலை எங்கே இருந்து கிடைத்தது?'' என்று கேட்டார்கள்.

குரங்கும் ''கொஞ்ச தூரத்திலுள்ள காட்டில் ஒரு நீர் மடு உள்ளது. அதில் சூரியோதய வேளையின் போது மூங்கிக் குளித்தால் இது கிடைக்கும். அதுவும் ஞாயிற்றுக் கிழமைகளில்தான் குளிக்க வேண்டும். குளித்து வெளியே வரும் போது கழுத்தில் இந்த மாலை தானே வந்து விழுந்திருக்கும்'' என்றது.

அதைக் கேட்ட மன்னன் ''சரி, இந்த ஞாயிற்றுக் கிழமையன்றே நானும் என் ஆட்களும் அந்த மடுவிற்குப் போய் குளிக்கிறோம். இந்த மாதிரி வைரமாலை ஒவ்வொருவருக்கும் அப்போது கிடைக்குமல்லவா?'' என்று கேட்டான்.

குரங்கும் ''ஆகா. அந்த நீர் மடுவில் குபேரன் இருக்கிறான். அவன்தான் இப்படிப்பட்ட மாலையை அணிவித்து ஒவ்வொருவரையும் ஆசீர்வதித்து அனுப்புகிறான். அந்த மடுவினுள் இந்த மாதிரி வைரமாலைகள் மலை



போலக் குவிந்து கிடக்கின்றன'' என்றது.

அரசனும் ஞாயிறன்று தன் மனைவி, மக்கள், உறவினர் என எல்லோரையும் அழைத்துக் கொண்டு அதிகாலையில் கிளம்பி விட்டான். குரங்கு சூரியோதயத்திற்கு முன் அவர்களை அந்த நீர் மடுவின் கரைக்குக் கொண்டு போய்ச் சேர்த்தது. அதுவரை அது மன்னனோடு பல்லக்கில் உட்கார்ந்தேதான் சென்றது.

கரையில் அவர்கள் அடைந்ததும் குரங்கு ''சூரியன் உதிக்கும் போது எல்லோரும் ஒன்றாக மடுவில் சென்று மூங்குங்கள். நானும் மன்னனும் நீங்களெல்லாம் வந்த

தும் மடுவில் குளிக்கிறோம்'' என்றது.

சூரியோதயம் ஆனது. அரசனை யும் குரங்கையும் தவிர மற்றவர் கள் எல்லோரும் அந்த மடுவினுள் இறங்கினர்கள். ஆனல் மடுவில் சென்றவர்களில் ஒருவன் கூடத் திரும்பி வரவே இல்லை.

சற்று நேரம் வரை காத்துப் பார்த்த மன்னன் ''ஏன் இவர்கள் எல்லோரும் இன்னும் திரும்பி வரவில்லை ?'' என்று குரங்கிடம் கேட்டான். குரங்கும் சட்டென ஒரு மரத்தின் மீது தாவி உயர மான கிளையில் போய் உட்கார்ந்து கொண்டு ''அட முட்டாள் மன்னனே! உன் உறவினர்களையும் ஆட்களையும் இந்த மடுவில் உள்ள யட்சப் பெண் விழுங்கி விட்டாள். நீ உன் குதிரைகளை குணப்படுத்த என் உறவினர்களை எல்லாம் கொன்ருய். நான் அதற்குப் பழி வாங்கவே இப்படிச் செய்தேன். இப்போதுதான் என் மனம் குளிர்ந்தது. நீ மன்னன். நீ உயி ருள்ள வரை இந்த வேதனையை அனுபவிக்க வேண்டும் என்பதற் காக உன்னை விட்டு வைத்தேன். தெரிந்ததா? உனக்கு ஆசை காட்டி மோசம் போகச் செய்து இங்கு இழுத்து வந்தேன். பழிக் குப் பழியும் வாங்கி விட்டேன். போ'' என்றது.

அரசன் அதைக் கேட்டு மனம் உடைந்து போனன். துக்கம் தாள முடியாமல் மெள்ள நடந்து தன் அரண்மனைக்கு அவன் சென் ருன். அவன் போன பின் யட்சப் பெண் நீர் மட்டத்திற்கு மேல் வந்து ''பேஷ். பேஷ். நல்ல காரி யம் செய்தாய். நீ பழிக்குப் பழி வாங்கிறாய். ஒரு வைரமாலையை யும் பெற்ருய். என் போன்ற ஒரு நண்பனையும் அடைந்தாய்'' என் றது. குரங்கும் மகிழ்ச்சியுடன் தனக்கு உதவிய யட்சப் பெண்ணி டம் விடை பெற்று காட்டிற்குள் திரும்பிச் சென்றது.





# 18

*[மாயக் குரங்கு சந்திரபுர மன்னனிடம் அவனது நகருக்கு வரப் போகும் ஆபத்து பற்றிக் கூறியது. ஒரு ராட்சஸன் நகரைத் தாக்க வருவது கேட்டு எல்லோரும் நடுநடுங்கினார்கள். மன்னன் மாயக் குரங்கான புளுகுராயனைத் தன் முதலமைச்சனாக நியமித்தான். பழைய முதலமைச்சன் அரசசபைக்கு வந்து புளுகுராயனைத் தன் வாளால் தாக்க முயல புளுகுராயன் அந்த வாளைப் பிடுங்கிக் கொண்டான். பிறகு—]*

புளுகுராயன் சூழ்ச்சிக்கார முதல் அமைச்சனைத் தாக்கப் போனதும் சபையோர் 'ஆ'வெனக் கத்தினார்கள். மன்னனும் எழுந்து வந்து புளுகுராயனின் கையைப் பிடித்துக் கொண்டு ''புளுகுராயரே! வேண்டாம். அரச சபையில் ரத்தம் சிந்தினால் அது நாட்டிற்கே கெடுதல். நான் இந்தப் பழைய முதலமைச்சனின் தலையைத் துண்டிக்க தண்டனை கொடுக்கிறேன். இதை நகரத் தலையாரி நிறைவேற்றுவான்'' என்றான்.

புளுகுராயன் வாளைத் தாழ்த்தி உறையுள் போட்டான். பிறகு அவன ''ஏய் பழம்பெருச்சாளியே! இப்போதைக்கு என்னிடமிருந்து தப்பினாய். உடனே நாட்டை விட்டுப் போய் விடு. இது முதலமைச்சரான நான் இடும் கட்டளை'' எனக்



கூறினான்." அதைக் கேட்ட பின் சூழ்ச்சிக்கார முதலமைச்சனும் புளுகுராயன் விட்டெறிந்த தன் வாளை எடுத்துக் கொண்டு "இப்போது அரசர் என் தலையை வெட்டவும் இந்தப் புளுகுராயன் என்னை நாட்டை விட்டுப் போகவும் கட்டளை இட்டிருக்கிறார்கள். சபையோரே! இப்போது நான் என்ன செய்ய வேண்டும் என நீங்களே கூறுங்கள்" என்று அங்கு கூடியுள்ள பிரமுகர்களைப் பார்த்துக் கேட்டான்.

சபையோருக்கு என்ன சொல்வது என்றே தெரியவில்லை. அப்போது சிற்றரசனான வெள்ளி அம்பலம் மன்னனை வணங்கி "அரசே. நான் வெள்ளி அம்பலம் என்ற சிற்றரசன். உங்கள் முன்னால் முதலமைச்சரை மன்னித்து விட்டு விடுங்கள். உங்கள் நகரைத் தாக்க உதயபுர மன்னன் வருகிறான். எனவே முதலில் இந்த நகரைக் காக்க ஏற்பாடு செய்யுங்கள்" என்றான்.

சந்திரபுர மன்னன் அப்போது உதயபுர மன்னனும் நகரைத் தாக்க வருகிறான் என்பதைக் கேட்டு கோட்டைக் காவலர் தலைவனிடம் "நீ கோட்டை வாசல் கதவை இழுத்து மூடு. எதிரிகள் உள்ளே நுழையாமல் பார்த்துக் கொள். படைத்தலைவர்களிடம் படை திரட்டி கோட்டை மதில்களில் ஏறி எதிரிகளைத் தாக்கச் சொல்" என்றான்.

காவல் தலைவனும் அரசனின் கட்டளையைப் படைத் தலைவர்களிடம் தெரிவிக்க ஓடினான். மன்னன் வெள்ளி அம்பலத்தைப் பார்த்து "நீ உதயபுர மன்னனின் சிற்றரசன் தானே?" என்று கேட்டான். வெள்ளி அம்பலமும் "அரசே. நான் பல வருடங்களாக உதயபுர மன்னனின் சிற்றரசனாக இருந்து வந்தேன். ஆனால் அவன் அரசாளத் தகுதி பெற்றவனல்ல எனக் கண்டு நான் போர்க் குரல் கொடுத்து அவனை எதிர்த்து அவனது நகரையும் கைப்பற்றிக்

கொண்டேன். எனக்கு உதயபுர மன்னனின் படைகளும் உதவின. ஆனால் இப்போது மாமணி என்பவனும் கரடிராயன் என்ற மந்திரவாதியும் ஒரு கரடிமனிதனும் காட்டில் வழிப்பறி செய்யும் திருடர்களும் இப்படி இன்னும் ஒருசிலரும் சேர்ந்து என்னைக் கோட்டையிலிருந்து விரட்டி விட்டார்கள். இப்போது உதயபுர மன்னனுக்கு இவர்கள்தாம் உதவுகிறார்கள்", என்றான்.

அப்போது சந்திரபுர மன்னன் புளுகுராயனிடம் ''புளுகுராயரே. இந்த வெள்ளி அம்பலம் கூறுவதைப் பார்த்தால் எதிரிகளின் எண்ணிக்கை அதிகமாக இல்லாது போனாலும் அவர்கள் மிகுந்த பலசாலிகள் என்றே தெரிகிறது. எனவே இந்தக் கோட்டையை நன்கு காக்க வேண்டும்'' என்றான்.

அப்போது புளுகுராயன் ''மன்னனே, கோட்டையைப் பற்றிக் கவலைப்பட வேண்டாம். அந்தக் கரடிராயன் மற்றவர்களின் உதவியோடு எப்படி வெள்ளி அம்பலத்தின் கோட்டைக்குள் புகுந்தான் தெரியுமா? கோட்டைத் தலைவாசல் கதவை எரித்து விட்டுத்தான். எனவே கோட்டைக் கதவை யாரும் எதுவும் செய்ய முடியாதபடி காக்க வேண்டும்'' என்றான்.



அரசனும் ஏதோ புரிந்து கொண்டவன் போலத் தலையை ஆட்டி ''வெள்ளி அம்பலம். நீதான் கோட்டை வாசலை ஜாக்கிரதையாகக் காவல் புரிய வேண்டும். நீ மட்டும் இதை நன்கு செய்தால் என் படைத் தலைவனாக நியமித்துக் கொள்கிறேன்'' என்றான்.

வெள்ளி அம்பலமும் அவ்வாறே செய்வதாகக் கூறி விட்டுக் கிளம்பலானான். அப்போது முன்னாள் முதலமைச்சன் ''அப்படியானால் இப்போது என் நிலை என்ன?'' என்று கேட்டான்.

அதற்குப் புளுகுராயன் ''இன்னமும் புரியவில்லையா! உன் பதவி எப்போதோ உன்னிடமிருந்து



போய் விட்டது. நீ மரியாதையாக இங்கிருந்து போய் விடு'' என்றான் மிடுக்காக.

வெள்ளி அம்பலம் போனதும் முன்னாள் முதலமைச்சனும் சபையை விட்டுச் செல்ல அதன் பிறகு நகரப் பிரமுகர்களும் எழுந்து சென்றார்கள். அப்போது புளுகுராயன் வெகு வேகமாக நடந்து வெளியே நின்று ''என் மந்திரக்கோலை யாரோ திருடிக் கொண்டு போய் விட்டார்கள். அந்தக் கோலை என்னிடம் கொண்டு வந்து கொடுப்பவனுக்கு மன்னர் தம் மகளைக் கல்யாணம் செய்து கொடுத்து நாட்டில் பாதியையும் அளிப்பார்'' என்று அறிவித்தான்.

அதைக் கேட்டு முன்னாள் முதலமைச்சன் ''அரசனுக்கு ஒரு குழந்தையும் பிறக்கவில்லை என்பது கூடத் தெரியாத பேர்வழி முதல் அமைச்சனும்! என்ன கேலிக் கூத்து! பாருங்கள்'' என உரக்கக் கூறினான். அதைக் கேட்டு எல்லோரும் 'ஆகா' என்று கை தட்டிச் சிரித்தார்கள்.

அப்போது அங்கு வந்த சந்திரபுர மன்னன் ''எனக்குக் குழந்தை குட்டி இல்லைதான். ஆனால் இந்தப் புளுகுராயரின் அறிவிப்பு பொய்யாகாது. நான் யாராவது ஒரு பெண்ணை சுவீகாரம் எடுத்துக் கொண்டு அவளை இந்தப் புளுகுராயரின் மந்திரக் கோலைக் கண்டு பிடித்துக் கொண்டு வந்து தரும் வாலிபனுக்கு விவாகம் செய்து வைப்பேன். அவனுக்கு இந்த நாட்டில் பாதியையும் அளிப்பேன்'' என்றான்.

அப்போது மக்கள் கூட்டம் அதைக் கேட்டு மகிழ்ந்தது. கரடியை ஆட்டி வித்தையாளன் காட்டிய வித்தைகளைப் பார்த்தவர்களும் அதில் இருந்தார்கள். அவர்களில் இருவர் சன்னியாசிகளைப் போல உடை தரித்து இருந்தார்கள். அவர்கள் அரசனது அறிவிப்பைக் கேட்டு ஒரேயடியாக மகிழ்ந்து துள்ளிக் குதித்தார்கள். அவர்களில் ஒருவன் தன் ஜோல்

ளுப் பைக்குள் கையை விட்டான். அப்போது மற்றவன் ''அடே சீடா. அவசரப் படாதே: முதலில் நம் குரு என்ன சொல்கிறார் என் பதைக் கேட்டு விட்டு அதன்படி நடப்போம்'' என்றான். மறுநிமிடமே இருவரும் அந்த இடத்தை விட்டுச் சென்றார்கள்.

எல்லோரும் தமக்குள் பலவாறு கப் பேசிக் கொண்டு கலைந்து போக நினைக்கையில் கோட்டை மதிலைத் தாண்டி ஒரு அம்பு 'விர்' ரெனப் பாய்ந்து தம்மிடையே விழுவதைக் கண்டார்கள். ஒரு சிலர் அதை எடுக்கப் போன போது புளுகுராயன் அவர்களைத் தடுத்து ''யாரும் தொடாதீர்கள். நான் வருகிறேன்'' என கூறி அங்கு போனான். பாய்ந்து விழுந்த அந்த அம்பை எடுத்து நன்கு பார்த்து விட்டு அதனை ஒடித்துத் துண்டு துண்டுகளாக்கி அவன் தூர எறிந்தான் பிறகு அவன் ''இந்த அம்பை எப்படிப் பொடிப் பொடி யாக்கிப் போட்டேனோ அது போலவே என் எதிரிகளையும் தூள் தூளாக்கி விடுகிறேன். உம், என் மந்திரக் கோல் கிடைத்ததா?'' என்று கேட்டான்.

அதற்கு பதில் சொல்வது போல ஒரு பாறாங்கல் வெகு தொலைவிலிருந்து வந்து அரண்மனைச் சுவரின் மீது தபார் என்று விழுந்தது. அதனால் சுவர் உடைந்து உள்ளே போக ஒரு வழியே ஏற்பட்டது. சந்திரபுர மன்னன் பயந்து நடு





நடுங்கினான். அவன் ''அடேயப்பா! இவ்வளவு பாரமான கல்லைக் கோட்டைக்கு வெளியே இருந்து கோட்டை மதிலைத் தாண்டிப் போக வீசி அரண்மனைச் சுவரையே உடைத்தானே. அவன் கண்டிப்பாக ராட்சஸனுகத்தான் இருக்க வேண்டும். புளுகுராயா! நம்மால் இந்த ராட்சஸனை எதிர்க்க முடியுமா?'' என்று கேட்டான்.

பெரிய பாறுங்கல் வந்து விழுந்ததுமே மக்களிடையே ஓரே பீதி ஏற்பட்டது. எல்லோரும் அலறி அடித்துக் கொண்டு மூலைக்கு மூலை ஓடினார்கள். அப்போது புளுகுராயன் மன்னனுக்கு தைரியம் மூட்டியவாறே ''பயம் வேண்டாம். என் குருநாதர் புரட்டுராயர் இமயமலைப் பகுதியில் இம்மாதிரி எவ்வளவோ ராட்சஸர்களை அடக்கித் தம் வேலைக்காரர்களாக்கிக் கொண்டிருக்கிறார்'' என்றான்.

அதைக் கேட்ட மன்னன் ''அப்படியானால் உங்கள் குருநாதரை வரவழைத்து விடுங்கள். அவர் என்னையும் என் நாட்டையும் இந்த ராட்சஸனிடமிருந்து காப்பாற்றட்டும். இதை உடனே செய்யுங்கள்'' என்றான்.

அதைக் கேட்ட புளுகுராயன் பலமாகச் சிரித்து ''மன்னனே! உன் அறியாமையை என்ன என்பது? இந்த மாதிரி ஒரு சுண்டைக்காய் வேலைக்காக என் குருநாதரான புரட்டுராயர் இமயமலையை விட்டு இங்கே வருவாரா என்ன? அவர் தம் சக்தியால் முதலில் இந்த பூஉலகையே வென்று விட்டுப் பிறகு தேவலோகத்தையும் தம் வசமாக்கிக் கொள்ளப் போகிறார். ஆனால் அவரது முயற்சிகளுக்கு எல்லாம் கரடியப்பன் என்ற ஒரு பயல் முட்டுக்கட்டை போட்டு வருகிறான். அந்தக் கரடியப்பன இப்போது இந்தக் கோட்டை மீது படை எடுத்து வரும் கரடிராயனின் குரு'' என்றான்.

புளுகுராயன் இப்படிக் கூறியதைக் கேட்டு சந்திரபுர மன்னன் ஏதோ யோசனை செய்யலானான். யாரோ இரண்டு மந்திரவாதிகள், ஏதோ அபூர்வ சக்திகளை அடையப் போட்டி போடுகிறார்கள் என்றும் அவற்றை அடைய அவர்கள் தன்னைப் போன்றவர்களைப் பயன் படுத்திக் கொள்கிறார்கள் என்பதும் அவன் மனதில் பட்டது. இந்தப் புளுகுராயன் இந்தக் கோட்டையைக் காப்பதை விட தன் எதிரியான கரடிராயனை ஒழிப்பதில் தான் கண்ணும் கருத்துமாக இருப்பான் என்பதும் அவனுக்கு நன்கு தெரிந்து விட்டது. இந்த நிலையில் கோட்டையின் பாதுகாப்பிற்கான ஏற்பாடுகளைத் தானே தனது நேரடிப் பார்வையில் செய்ய வேண்டும் எனத் தீர்மானித்துக் கொண்டான்.

இப்படி எண்ணிய மன்னன் புளுகுராயனிடம் ''புளுகுராயரே! நாம் இப்போது கோட்டை மதில் மீது ஏறிப் பார்ப்போம். எதிரிகள் எவ்வளவு தூரத்தில் இருக்கிறார்கள் என்பதை முதலில் பார்த்துக் கொள்ளலாம். நம் படை வீரர்களையும் எச்சரிக்க வேண்டும்'' எனக் கூறியவாறே கோட்டை மதிலை நோக்கிச் சென்றான்.

அப்போது புளுகுராயன் "ஆகா! இன்னமும் என் மந்திரக்கோல் கிடைக்கவில்லையா?'' என்று கத்தியவாறே மன்னனின் பின்னால் ஓடினான்.



மன்னனும் புளுகுராயனும் கோட்டை மதிலின் மீது ஏறிச் சுற்றிலும் பார்த்தார்கள். கொஞ்ச தூரத்தில் குதிரை மீது ஏறி வரும் மாமணியையும், எருமை மாட்டின் மீது ஏறி வரும் கரடிராயனையும், யானை மீது ஏறி வரும் கரடிமனிதனையும், ராட்சஸனான உலக்கை ராயனையும் மற்றும் பல வீரர்களையும் அவர்கள் பார்த்தார்கள்.

மன்னனின் கால்கள் 'வெட வெட'வென்று ஆடலாயின். அவன் புளுகுராயனிடம் ''ஐயோ, இந்த ராட்சஸனைப் பார்த்தாலே பயமாக இருக்கிறது. என் இருதயம் 'படக்' 'படக்'கென்று அடித்துக் கொள்கிறது. இவனை எதிர்த்து வெற்றி பெற நம் போன்ற மானிடர்களால் முடியுமா?'' என்று கேட்டான்.

புளுகுராயனும் ''மானிடனால் முடியாததை மந்திரசக்தியால் செய்து முடிக்கலாம். ஆனால் அதற்கும் என் மந்திரக் கோல் வேண்டும். இன்னமும் யாரும் அதைக் கண்டு பிடித்துக் கொண்டு வரவில்லையா?'' என்று கத்திக் கேட்டான்.

அப்போது கோட்டைக்கு வெளியே இருந்து ஒரு குரல் ''அடே குரங்குப்பயலே! மந்திரக் கோலா வேண்டும்! இதோ பிடித்துக் கொள். அனுப்புகிறேன்'' எனக் கூறியது. அடுத்த வினாடியே காட்டு மனிதன் எய்த அம்பு விர்ரெனப் பாய்ந்து வந்து புளுகுராயனின் முழங்காலில் குத்தியது.

அப்போது புளுகுராயன் வலி பொறுக்க முடியாமல் ''குருவே. நீங்களே துணை'' எனக் கூறிக் காலில் குத்தி நின்ற அம்பை எடுத்து ''இந்த அம்பு இந்தப் புளுகுராயனை என்ன செய்து விடும்?'' எனக் கூறி கோட்டைக்கு வெளியே நின்ற மாமணியையும் கரடிராயனையும் நோக்கி விட்டு எறிந்தான்.

(தொடரும்)





# பாமரர் பேச்சு இது!

தன் முயற்சியில் சற்றும் மனம் தளராத விக்கிரமன் மீண்டும் மரத்தின் மீதேறி அங்கு தொங்கும் உடலைக் கீழே விழ்த்தினான். பின்னர் கீழே இறங்கி அதைச் சுமந்து கொண்டு மயானத்தை நோக்கிச் செல்கையில் அதனுள் இருந்த வேதாளம் எள்ளி நகைத்து ''மன்னனே, உன் போன்ற மன்னர்களின் மதிப்பு என்பது ஒரு சிலருக்குத் தெரியாது போகலாம். ஆட்சி புரிந்த பின் ஓய்வு பெற்று அமர வேண்டிய நீ இப்படிக் கஷ்டப்படுவதைப் பார்த்தால் இந்திரபுரி மன்னன் இந்துசேனனின் நிலை நினைவிற்கு வருகிறது. உனக்கு அவன் கதையைக் கூறுகிறேன். கவனமாகக் கேள்'' என்று கூறிக் கதை சொல்லலாற்று.

இந்திரசேனனுக்குப் படித்தவர்கள், பண்டிதர்கள் என்றால் மிகவும்

## வேதாளம் சொல்லும் கதை



பிடிக்கும். எனவே தன் சபையில் சர்வஞானி என்பவரைத் தலைமைப் பண்டிதராக நியமித்தான். சர்வஞானிக்கும் தானே உயர்ந்தவன் என்ற கர்வமும் இருந்தது.

இந்திரசேனன் அவ்வப்போது மாறுவேடத்தில் போய்த் தன் நாட்டைச் சுற்றிப் பார்ப்பது வழக்கம். ஒரு முறை ஒரு காட்டுப் பகுதியில் அப்படி அவன் சென்று கொண்டிருந்த போது ஒரு பெரிய ஆபத்தில் அகப்பட்டுக் கொண்டான். அப்போது ஒரு மலைவாசி அவனைக் காப்பாற்றினான். தலைநகர் திரும்பிய மன்னன் தன் வீரர்களை அனுப்பி அந்த மலைவாசியை அழைத்து வரச் செய்தான்.

மலைவாசி திகைத்தவாறே தர்பாருக்குள் நுழைந்தான். அரசன் சிம்மாசனத்திலிருந்து இறங்கிப் போய் ''என்னைத் தெரிகிறதா? காட்டில் என்னை நீ மாபெரும் ஆபத்திலிருந்து காப்பாற்றினாயே'' என்றான். மலைவாசியும் ''ஆமாம். அடே நீயா! நீ அரசனா? உன்னை நீயே காப்பாற்றிக் கொள்ள முடியவில்லையே. எப்படித்தான் நீ மக்களைக் காப்பாற்றுகிறாயோ?'' என்று ஆச்சரியத்துடன் கேட்டான்.

அரசன் அவன் மீது கோபம் கொள்வான் எனச் சபையில் இருந்தவர்கள் எதிர்பார்த்தார்கள். ஆனால் அரசனோ அமைதியாக ''நீ சந்தேகப்படுவது நியாயமே. சில சமயங்களில் சூழ்நிலைகாரணமாகச் சக்தி வாய்ந்தவர்களால் கூட எதுவும் செய்ய முடியாமல் போய் விடுகிறது. நீ இந்நாட்டு மன்னனைக் காப்பாற்றியது உன் அதிர்ஷ்டமே'' என்று கூறி ஆயிரம் பவுன் பரிசாக அளித்தான்.

மலைவாசி அதற்கு முன் அவ்வளவு தங்கநாணயங்களை ஒரே முறையில் பார்த்திராததால் மலைத்து நின்றான். பிறகு பணத்தை வாங்கிக் கொண்டு அவன் ''அடுத்த முறை நாட்டைச் சுற்றிப் பார்க்கும் போது ஜாக்கிரதையாக இரு அப்பா. எனக்கும் பல வேலைகள் உள்ளன. நினைத்த போதெல்

லாம் ஓடி வந்து உன்னை நான் காப்பாற்ற முடியாது என்பதைத் தெரிந்து கொள்'' என்றான். அரசனும் பலமாகச் சிரித்து அவனுக்கு விடை கொடுத்து அனுப்பினான்.

அரசன் ஒரு மலைவாசியின் பண்பற்ற பேச்சைச் சகித்துக் கொண்டிருந்தது கண்டு சபையோர் அவனது சகிப்புத்தன்மையைப் பாராட்டினார்கள். ஆனால் பண்டிதர் தலைவனான சர்வஞானிக்கு ஏனோ மனதில் ஒருவித ஆத்திரமே ஏற்பட்டது. அரசன் மலைவாசிக்குப் பரிசு அளித்தது பற்றி அவன் குறைப்பட்டுக் கொள்ளவில்லை. ஆனால் மட்டுமரியாதை இல்லாது அவன் அரசனிடம் பேச அரசன் அதைக் கேட்டு சகித்துக் கொண்டானே. இப்படிப்பட்ட அரசன் தனக்கு அளிக்கும் மரியாதைக்கு என்ன மதிப்பு என எண்ணலானான்.

அரசன் தன்னை மலைவாசியைப் போல மதிக்கிறானா அல்லது இல்லையா எனப் பார்க்க சர்வஞானி விரும்பினான். அதற்காகத் தக்க சமயத்தை எதிர்பார்த்திருந்தான். அப்படி ஒரு சமயமும் வந்தது. அரசன் ஏதோ ஒரு வார்த்தையின் பொருள் என்ன என்று சர்வஞானியிடம் கேட்டான். அவனும் "இதன் அர்த்தமா? ஒரு முட்டாளுக்குக் கூட இதன் பொருள் தெரியுமே. உங்களுக்குத் தெரியவில்லையா?'' என்றான்.

மறுகணமே அரசனின் கண்கள் கோவைப்பழம் போலச் சிவந்தன.



அரசன் சட்டென சபையிலிருந்து எழுந்து போய் விட்டான். மறு நாள் சர்வஞானியின் பதவி பறிக்கப்பட்டு விட்டது.

வேதாளம் இக்கதையைக் கூறி ''மன்னனே. மலைவாசியின் பண்பற்ற பேச்சுக்களைச் சகித்துக் கொண்ட மன்னன் தான் அது வரை ஆதரித்து கௌரவித்த ஆஸ்தான பண்டிதரின் ஒரு சொல்லை ஏன் பொறுத்துக் கொள்ள முடியாமல் போனான்? இந்தக் கேள்விக்குத் தக்க பதில் தெரிந்திருந்தும் நீ கூறாவிட்டால் உன் தலை வெடித்துச் சுக்குநூறாகி விடும்'' என்றது.

விக்கிரமனும் ''மலைவாசி மன்னனின் உயிரைக் காத்தவன். அதனால் அவனது தந்தைக்குச் சமம். அவன் அரசனை எச்சரித்தானே தவிர, அவமானப் படுத்தவில்லை. அவன் மலைவாசி. அரச சபைக்கு வந்து திகைத்துப் போய் பேசிய பேச்சு அது. அவனது இயல்பான பேச்சே அப்படித்தான். அவன் பரிசை எதிர்பார்த்து அரச சபைக்கு வரவும் இல்லை. ஒரு மலைவாசியின் பேச்சு பண்பட்டதாக இருக்கும் என அரசனும் எதிர் பார்க்கவில்லை. இப்படிப் பட்டவன் கூறுவதை யாரும் பெரிதாக மதிக்க மாட்டார்கள். ஆனால் ஆஸ்தான பண்டிதர்களின் ஒவ்வொரு சொல்லிற்கும் எல்லோரும் மதிப்பு அளிப்பார்கள். ஒரு பண்பட்ட பண்டிதர் அப்படிப் பேசியது அவமானப் படுத்துவதைத் தான் குறிக்கும். அதை அரசன் சகித்துக் கொண்டால் மறு நிமிடம் முதல் அரசனை யாருமே மதிக்க மாட்டார்கள். எனவே அரசன் பண்டிதரை வேலையிலிருந்து நீக்கினான்'' என்றான்.

அரசனின் சரியான இந்த பதிலால் அவன் சுமந்து வந்த உடலோடு வேதாளம் உயரக் கிளம்பி மீண்டும் முருங்க மரத்தின் மீது ஏறிக் கொண்டது.





# விசித்திர வித்வான்

சிங்கபுர நாட்டை சிம்மவர்மன் ஆண்ட போது அவனது சபைக்கு ஒரு நாள் ஒரு சங்கீத வித்வான் வந்தார். அவர் தனக்கு தர்பாரில் உத்தியோகம் கொடுக்குமாறு அரசனிடம் வேண்டினர். அரசனே ''என் சபையில் இப்போதே நிறைய சங்கீத வித்வான்கள் இருக்கிறார்கள். உங்களுக்கு இப்போது உத்தியோகம் கொடுக்க முடியாது'' என்றான். வித்வான் அன்று போய் விட்டார்.

மறு நாள் அவர் மீண்டும் வந்து அரசனிடம் உத்தியோகம் கேட்கவே அரசனும், ஒன்றும் இல்லை' என்று பதில் கூறினன். இப்படியே தினமும் அந்த வித்வான் சபைக்கு வந்து உத்தியோகம் கேட்பதும் அரசன் 'இல்லை' என்று கை விரிப்பதுமாக மூன்று மாத காலம் கழிந்தது.

தினமும் வித்வான் உத்தியோகம் கேட்கத் தான் 'இல்லை' என்ற பதிலைக் கூறி வந்தது அரசனுக்கே என்னவோ போலிருந்தது. அவர் கேட்கும் உத்தியோகத்தைக் கொடுத்து விடுவது என ஒரு நாள் மன்னன் தீர்மானித்தான்.

அன்று அந்த வித்வான் சபைக்கு வந்து வழக்கம் போல சிம்மவர்மனிடம் உத்தியோகம் கேட்க, மன்னனும் ''நீங்கள் உங்கள் பாட்டை சில வித்வான்களுக்குப் பாடிக் காட்டுங்கள். அவர்கள் நன்றாக இருக்கிறது என்று கூறினால் உங்களை ஆஸ்தான வித்வான்களில் ஒருவராக நியமித்துக் கொள்கிறேன்'' என்றான்.

ஆனால் அந்த வித்வானே ''அரசே, எனக்கு ஒரு கொள்கை உண்டு. நான் எனக்கு இஷ்டம் வந்த போது தான் பாடுவேன்.

கனகா இராமசாமி

ஒருவர் 'இப்போது பாடு' என்றதும் பாட மாட்டேன். இதற்குச் சம்மதமானல் நான் உத்தியோகம் செய்கிறேன்'' என்ருர்.

சிம்மவர்மனுக்குக் கோபம் வந்தது. உடனேயே அவன் ''இப்படிப் பட்ட கொள்கை கொண்டவனை நான் உத்தியோகத்தில் வைத்துக் கொள்ள முடியாது'' என்று கூறி விட்டான். வித்வானும் அன்று போய் விட்டார். ஆனல் மறு நாள் முதல் மறுபடியும் வந்து உத்தியோகம் கேட்கலானர். அரசனும் 'இல்லை' என்று சொல்ல இப்படியே ஒரு மாதம் கழிந்தது.

அரசன் மனதில் ''இந்த வித்வானின் மனதில் ஏதோ ஒரு எண்ணம் உள்ளது. அதைத் தெரிந்து கொள்ள வேண்டும்'' என நினைத்துக் கொண்டான்.

இப்படித் தீர்மானித்த மறு நாள் அந்த வித்வான் சபைக்கு வந்ததுமே அரசன் ''வித்வானே. உம்மை இன்று முதல் என் ஆஸ்தான வித்வானுக நியமித்திருக்கிறேன்'' என்று கூறினன். அது கேட்டு சபையில் இருந்தவர்கள் எல்லோரும் ஆச்சரியப்பட்டார்கள். ஆனல் அந்த வித்வான் ஆச்சரியம் அடையவில்லை. அவர் உடனேயே உத்தியோகத்தில் சேர்ந்து விட்டார்.

வித்வான் உத்தியோகம் பெற்ற போதிலும் அவர் பாடி யாரும் கேட்கவில்லை. அரசனுக்கு ஆண



குழந்தை பிறந்தது. நாடெங்கிலும் அதனை விமரிசையாகக் கொண்டாடினார்கள். நடனக் கச்சேரிகளும் இசைக் கச்சேரிகளுமாக நடந்தன. ஆஸ்தான சங்கீத வித்வான்களும் மற்ற வித்வான்களும் பாடினார்கள். ஆனால் புதிதாக நியமிக்கப் பட்ட வித்வான் மட்டும் பாடவில்லை. இதைக் கண்டு அரசன் சில வித்வான்களிடம் சொல்லி அவனைப் பாட வைக்க முயன்றான். ஆனால் அந்த வித்வானோ ''நான் பாட வேண்டிய வேளை வரும். அப்போது பாடுகிறேன்'' என்று கூறி விட்டார்.

பல முறைகளில் அரசன் அந்த வித்வானை உத்தியோகத்திலிருந்து விலக்கி விடலாமா என்று கூட எண்ணினான். ஆனால் அவரது நடத்தையில் ஏதோ ஒரு ரகசியம் இருக்கிறது என எண்ணி அதைக் கண்டு பிடிப்பது என அவன் தீர்மானித்துக் கொண்டான்.

இப்படியே ஐந்து வருடங்கள் உருண்டு ஓடின. திடீரென அரசகுமாரனுக்குக் காய்ச்சல் கண்டது. அது விஷ ஜுரம் என்றாகி எந்த வைத்தியராலும் குணப்படுத்த முடியாதபடி ஆகி விட்டது. அரசகுமாரன் படுக்கையில் படுத்தே கிடந்தான். இனி அவன் எங்கே உயிர் பிழைக்கப் போகிறான் என்றே எல்லோரும் எண்ணி விட்டார்கள். எல்லோரும் அவனது படுக்கையைச் சுற்றி நின்று கண்ணீர் வடிக்கலானார்கள்.



இந்த சமயத்தில் புது வித்வான் தம் வீணையோடு அங்கு வந்து உட்கார்ந்து கொண்டு பாடலானார். அவர் பாட ஆரம்பித்ததுமே அங்குள்ளவர்கள் ''என்ன மனுஷன் இவன்? இங்கே அரசகுமாரனின் உயிர் போகும் போலிருக்கிறது. பாட்டு என்ன வேண்டியிருக்கிறது?'' என்று கூறி முகம் சுளித்தார்கள்.

ஆனால் அந்த வித்வான் அதை எல்லாம் காதில் போட்டுக் கொள்ளாமல் பாடலானார். சற்று நேரத்தில் அங்கிருந்தவர்களெல்லாம் அவரது சங்கீதத்தில் லயித்துப்போய் விட்டார்கள். எல்லோரும் அரசகுமாரனையோ அவனது நோயையோ அப்போது மறந்தே போய் விட்டார்கள். மன்னனும் அதே நிலையில் தான் இருந்தான்.

அவன் சட்டென ஏதோ நினைவிற்கு வந்தவன் போலத் தன் மகன் படுத்திருந்த படுக்கையைப் பார்த்தான். அதில் அரசகுமாரன் இல்லாதது கண்டு திடுக்கிட்டான்.

ஆனால் மறு நிமிடமே அவனது முகம் மலர்ந்தது. ஏனெனில் சற்று தூரத்தில் அரசகுமாரன் எழுந்து உட்கார்ந்து கொண்டு வித்வானின் இசையைத் தலையை ஆட்டி ஆட்டி ரசித்துக் கொண்டு இருந்தான்.

சற்று நேரத்திற்குப் பின் திடீரென இசை நின்றது. வித்வான் தன் வீணையை எடுத்துக் கொண்டு வெளியே சென்று விட்டார். அரசகுமாரன் பிழைத்து எழுந்தது கண்டு எல்லோரும் ஆச்சரியப்பட்டு அது பற்றியே பேசினார்கள். அப்போது வெளியே போன வித்வானைப் பற்றி யாரும் நினைக்கவில்லை.

அரசன் அந்த வித்வானுக்கு நிலபுலன்கள் பரிசாக அளித்து கௌரவிக்க எண்ணி அவரைத் தேடினான். ஆனால் அவர் எங்குமே தென்படவில்லை.






மாளவ நாட்டில் மானசிம்மன் என்பவன் அரசாங்கத்தில் ஒரு சிறு உத்தியோகத்தில் இருந்தான். வெகு காலம்வரை அவன் கல்யாணம் செய்து கொள்ளாமலேயே இருந்து வந்தான். அதற்குக் காரணம் தான் குடும்பம் நடத்தத் தன் வருவாய் போதுமானதாக இல்லை என்பதே.

ஆனால் அவனது தாய் அவனை வற்புறுத்தி அவனைக் கல்யாணம் செய்து கொள்ள வைத்தாள். மானசிம்மன் ஒரு கிராமத்துப் பெண்ணான மல்லிகாவை' மணந்து கொண்டான். மல்லிகா அழகானவள், நற்குணங்கள் நிரம்பியவள். ஏழைக் குடும்பத்தில் பிறந்தவளாதலால் சிக்கனமாக இருக்கவும்-பிறரிடம் மரியாதையாகவும் நடக்கவும் அறிந்தவள். கல்யாணமானபின் மானசிம்மன் தன் மனைவியிடம் மதிப்பைப் பெற ஆடம்பரமான செலவுகளைச் செய்யலானான். மல்லிகாவிற்குத் தன் கணவனின் மாதச் சம்பளம் எவ்வளவு என்று தெரியும். அவனுக்குச் சொத்தும் எதுவும் இல்லை எனவும் அறிவாள். எனவே தன் கணவனிடம் வீண் செலவு வேண்டாம் என்றும் அதனால் கடன் தான் வாங்க வேண்டி வரும் என்றும் மல்லிகா எச்சரித்து வந்தாள்.

மானசிம்மனோ ''அப்படி சிக்கனமாக ஏன் நாம் வாழ வேண்டும்? நம் அந்தஸ்திற்குத் தக்கபடி வாழ்வோம்'' எனக் கூறித் தன் போக்கிலேயே போகலானான். அதனால் அவனது கடன் சுமை அதிகரிக்கலாயிற்று. அப்போது தனக்கு மேலும் நல்ல உத்தியோகம் கிடைக்க வேண்டும் என முயற்சி செய்தான். ஆனால் அம்முயற்சி

பாபநாசம் சாமா



களில் வெற்றி பெறவில்லை. ஒரு நாள் மானசிம்மனின் தாய் மாமன் தன் சகோதரியையும் மருமகனையும் பார்க்க வந்தான். அவனுக்கு அரசாங்க உயர் அதிகாரிகள் பல பேர்களைத் தெரியும். எனவே மானசிம்மன் தான் பட்டுள்ள கடனைப் பற்றிக் கூறி அரசாங்கத்தில் தனக்கு ஒரு உயர்வான உத்தியோகம் வாங்கிக் கொடுக்கும்படிக் கூறினான்.

மாமன் தன் மருமகன் கூறியதைக் கேட்டு ஆச்சரியப்பட்டான். ஏனெனில் இப்போது மானசிம்மன் பார்க்கும் உத்தியோகமே அவனது தகுதிக்கு மேலானது. மேலும் இப்போது கிடைக்கும் சம்பளமும் குடும்பம் நடத்தப் போதுமானதே. இதே உத்தியோகத்தில் மேலும் சில ஆண்டுகள் இருந்து திறமையைக் காட்டினால் அவனுக்குத் தன்னால் உத்தியோக உயர்வும் கிடைத்து விடும்.

இதையெல்லாம் தன் மருமகன் யோசித்துப் பார்க்கவில்லையே என மாமன் எண்ணினான். பிறகு மானசிம்மனிடம் ''சிம்மா, நீ உனது இப்போதைய உத்தியோகத்தில் ஈடுபாடும் மதிப்பும் கொண்டாலே படிப்படியாக உயர்ந்து கொண்டு போக முடியும். முதலில் இப்போது கிடைக்கும் சம்பளத்தைக் கொண்டு திருப்தி அடைய முயல்வாய்'' என்றான்.

மானசிம்மனுக்குத் தன் மாமன் இவ்வாறு அறிவுரை கூறியது பிடிக்கவில்லை. ஏதோ சாக்குப் போக்கு சொல்லித் தட்டிக் கழிக்க மாமன் முயல்கிறான் என அவன் எண்ணினான். அவன் எண்ணத்தை அவனது தாய் மாமனும் அறிந்து கொண்டு விட்டான்.

அதனால் அவன் ''சிம்மா, நீ என்ன வேலை வேண்டும் என எதிர்பார்க்கிறாய்?'' என்று கேட்கவே அவனும் நம்பிக்கை கொண்டவனாக ''பொக்கிஷதாரனாகவோ அல்லது வட்டார அதிகாரியாகவோ இருந்தால் கௌரவமாகவும் இருக்கும், பணமும் நிறை

யக் கிடைக்கும்'' என்றான். அது கேட்டு அவன் மாமனும் ''சரி, நாளை நீ என்னோடு வா. இப்போதுள்ள பொக்கிஷ அதிகாரியை எனக்குத் தெரியும் அவரைப் பார்த்து ஏதாவது முயற்சி செய்யலாம்'' என்றான்.

மறு நாள் மானசிம்மன் தன் மாமனுடன் பொக்கிஷ அதிகாரியைப் பார்க்கச் சென்றான். மாமன் அவரிடம் மானசிம்மனின் விருப்பத்தைக் கூறவே அவரும் அவனை ஒரு முறை ஏற இறங்கப் பார்த்தார். பிறகு அவன் தற்போது பார்க்கும் உத்தியோகம் பற்றித் தெரிந்து கொண்டார்.

அவர் மானசிம்மனிடம் ''நீ உயர் உத்தியோகம் பெற முயல்வது பாராட்டத்தக்கதே. ஆனால் இந்த வேலை பார்ப்பது முள்மேல் இருப்பது போல. பணவிவகாரம். அதனால் ஒரு காசு கூட குறையவோ கூடவோ கணக்கில் வரக் கூடாது. அப்படி இருந்தால் கடுந்தண்டனையே கிடைக்கும். இந்த வேலைக்கு அறிவு மட்டும் போதாது. நேர்மை, அனுபவம் ஆகியவை வேண்டும்'' என்றார்.

மானசிம்மனுக்கு அந்த அதிகாரி இப்படி எல்லாம் கூறியது பிடிக்கவில்லை. அப்போது பொக்கிஷ அதிகாரி ''நான் இப்பதவிக்கு வருமுன் மணி அடிப்பவனாகவும், பிறகு வாயில் காப்போனாகவும் அதன் பிறகு கோட்டை வாசலில் காவல் வீரனாகவும் கடைசியில்



பொக்கிஷ அறையின் காவலாளியாகவும் இருந்தேன். அரசன் என்னை ஒவ்வொரு கட்டத்திலும் பரீட்சித்து எல்லாவற்றிலும் நான் தேறிய பிறகே எனக்கு இப்பதவியை அளித்தார்'' என்றார்.

மானசிம்மனுக்கு அது ஏதோ ஒரு சொற்பொழிவு போலத் தோன்றியது. அவன் தன் மாமனைப் பார்க்கவே மாமனும் அந்த அதிகாரியிடம் விடை பெற்றுக் கொண்டு கிளம்பினான். வழியில் மாமன் ''இவர் என்னென்னமோ கதை சொல்கிறார். நாம் வட்டார அதிகாரியைப் பார்க்கலாம். அவர் உதவலாம்'' என்றான்.

மானசிம்மனுக்கு மீண்டும் நம்பிக்கை ஏற்பட்டது. அவர்கள் வட்டார அதிகாரியின் வீட்டிற்குப் போகும் வழியில் சில இளைஞர்களை பார்த்தார்கள். மானசிம்மனின் மாமன் அவர்களிடம் ''நீங்களெல்லாம் எங்கே போகிறீர்கள்?'' என்று கேட்டான்.

அவர்களில் ஒருவன் ''நாங்கள் ஏதாவது வேலை கிடைக்குமா என்றே இங்கு வந்தோம். எல்லோரும் வித்வான்களே. ஆனால் எங்கள் படிப்பால் பணம் சம்பாதிக்க முடியவில்லை. இங்கும் யாரும் அதற்கு மதிப்புக் கொடாததால் கிராமங்களுக்குப் போய்ப் பயிர்த் தொழிலில் ஈடுபடப் போகிறோம்'' என்றான்.

மானசிம்மனிடம் அப்போது திடீரென மன மாற்றம் ஏற்பட்டது. அவன் தன் மாமனிடம் ''மாமா, இப்படியே வீடு திரும்பலாம். வட்டார அதிகாரியைப் போய்ப் பார்க்க வேண்டாம். இப்போது எனக்கு உள்ள உத்தியோகமே போதும். இதிலிருந்து கொண்டே உயர் உத்தியோகத்தைப் படிப்படியாக அடைய முயல்கிறேன்'' என்றான்.

அவனது மாமனும் தனக்குள் சிரித்தவாறே மருமகனுடன் வீடு திரும்பினான்.





# சுக்கிரர்

சுக்கிராச்சாரியார் அசுரர்களின் குரு. இவர் பிருகுவின் புதல்வர். தேவகுருவான பிரகஸ்பதியும் இவரும் ஒரு குருவிடம் கல்விபயின்றவர்கள். அந்த குரு ஆங்கீரசர். தம் சீடர்களிடையே பாரபட்சம் காட்டுவது கண்டு சுக்கிரர் அவரை விட்டு கௌதமரிடம் கல்வி பயிலச் சென்றார்.

கௌதமரோ ''நீ சிவனை அணுகினால் எல்லாப் படிப்புகளையும் கற்கலாம்'' எனக் கூறி அனுப்பி விட்டார். சுக்கிரரும் சிவனைக் குறித்துத் தவம் செய்ய சிவனும் அவருக்கு 'மிருதசஞ்சீவினி' என்ற அபூர்வ வித்தையைக் கற்றுக் கொடுத்தார்.

சுக்கிரர் அதன் பின் அசுரர்களின் குருவாகி தேவர்களுக்கும் அசுரர்களுக்கும் போர் நடந்த போதெல்லாம் இறந்து போன அசுரர்களைத் தம் மிருதசஞ்சீவினி வித்தையால் மீண்டும் உயிர்ப்பித்து வந்தார்.

அந்தகாசுரன் என்பவன் தேவர்களைத் துன்புறுத்தினான். அவன் பிரம்மாவிடம் அரிய வரங்கள் பெற்றவன். அழகிய ஸ்திரீகளைக் கண்டால் கவர்ந்து கொண்டு போய் விடுவான். அவன் சிவனின் மனைவி பார்வதிதேவியையே தூக்கிக் கொண்டு போக முயன்றான். அவனைக் கொன்றால் சுக்கிரர் மிருதசஞ்சீவினியால் உயிர்ப்பித்து விடுவார் எனக் கண்டு சிவன் சுக்கிரரை எடுத்து விழுங்கி விட்டு அந்தகாசுரனைக் கொன்றார். கொஞ்ச நாட்களுக்குப் பிறகு சுக்கிரர் சிவனாரிடமிருந்து வெளியே வந்தார்.

சுக்கிரனின் மிருதசஞ்சீவினி வித்தை அசுரர்களுக்குப் பயன்

படக் கூடாதென தேவர்கள் கருதினார்கள். இந்திரன் தன் மகளான ஜெயந்தியை சுக்கிரரிடம் அனுப்ப அவர் ஜெயந்தியின் மீது மோகம் கொண்டு அவளோடு அசுரர்கள் கண்களில் படாமல் எங்கோ போய் விட்டார்.

அசுரர்கள் சுக்கிரரைத் தேட முயன்ற போது பிரகஸ்பதி சுக்கிரரைப் போல உருக் கொண்டு அவர்களிடையே சென்று அவர்களது இரகசியங்களைத் தெரிந்து கொண்டார். இதற்குள் உண்மையான சுக்கிரர் வரவே அசுரர்கள் திகைத்தனர்.

சுக்கிரரிடமிருந்து மிருதசஞ்சீவினி வித்தையை தேவகுரு பிரகஸ்பதியின் மகன் கசன் கற்க அவரிடம் சீடனானான். அசுரர்கள் அவனை ஒழிக்கப் பலவாறு முயல அப்போது சுக்கிரரின் மகள் தந்தையிடம் சொல்லி மிருதசஞ்சீவினியால் அவன் உயிர் பெறச் செய்தாள். முடிவில் அசுரர்கள் கசனை எரித்து அவனது சாம்பலை சுக்கிரர் குடிக்கும் மதுவில் கலந்து விட்டார்கள். மதுவைக் குடித்த சுக்கிரர் தம் வயிற்றில் கசன் இருப்பதைக் கண்டார். அவனுக்கு அவர் மிருதசஞ்சீவினியை உபதேசிக்க அவன் சுக்கிரரின் வயிற்றைக் கிழித்துக் கொண்டு வெளியே வந்து தான் கற்ற மிருதசஞ்சீவினியால் சுக்கிரரை உயிர் பெறச் செய்தான்.

சுக்கிரர் ஒற்றைக் கண் பேர்வழி மகாபலி வாமனருக்கு தானம் செய்ய கமண்டலத்திலிருந்து நீரை விடும் போது அந்த தானத்தைத் தடுக்க சுக்கிரர் வண்டாகி கமண்டலத்தின் மூக்கு துவாரத்தை அடைத்தார். ஆனால் தர்ப்பைப் புல்லால் அந்த மூக்கைக் குத்தவே அப்போது சுக்கிரரின் ஒரு கண் போயிற்று.

சுக்கிர நட்சத்திரம் மற்ற எல்லாவற்றையும் விட ஆகாயத்தில் ஒளி விடுவதைக் காணலாம்.



# உத்தம சீடர்



தௌம்யரின் ஆசிரமத்தில் பல சீடர்கள் இருந்து பலவிதப் பணிகள் புரிந்து அவரிடம் கல்வி கற்று வந்தார்கள்.



தௌம்யரின் சீடர்களில் உபமன்யு என்பவன் அவரது பசுக்களை மேய்த்து வருவான். காலையில் அவற்றைக் காடுகளுக்கு ஓட்டிப் போய் மேய விட்டு மாலையில் அவற்றோடு அவன் வருவான்.



ஒரு நாள் தௌம்யர் உபமன்யுவிடம் "நீ என்ன சாப்பிடுகிறாய்?" என்று கேட்க பசுக்கள் மேயும் போது அருகேயுள்ள கிராமங்களில் பிச்சை பெற்று அதனைச் சாப்பிடுவதாக அவர் பதிலளித்தார். "என் அனுமதி இல்லாமல் அதை நீ எப்படி சாப்பிடலாம்?" என்று தௌம்யர் கேட்டார்.



மறுநாள் உபமன்யு தான் பிச்சையாகப் பெற்றதைக் சாப்பிடாமல் கொண்டு வந்து குருவிடம் கொடுத்தார். குரு அதில் தனக்குக் கொஞ்சம் கொடுப்பார் என அவர் நினைத்தார். ஆனால் தௌம்யர் எதுவும் கொடுக்க வில்லை. ஆயினும் உபமன்யு தினமும் பிச்சையாகப் பெற்றதை குருவிடம் கொடுத்து வந்தார்.

இதன் பின் உபமன்யு பசுக்களின் பாலைக் கறந்து குடித்து வந்தார். இதை அறிந்த குரு "ஆசிரமத்தில் பாலைக் கறந்த பின் பசுக்களிடம் உள்ள பால் அவற்றின் கன்றுகளுக்குத்தான் சொந்தம்" என்றார்.





அப்போது உபமன்யு கன்றுகள் பசுக்களிடமிருந்து பால் குடித்த போது அவற்றின் வாய்களினுள்ள நுரையைச் சாப்பிடலானார். அதுவும் செய்யக் கூடாது என தௌம்யர் கூறினார். ஏனெனில் கன்றுகள் உபமன்யுவின் மீது கொண்ட பிரியத்தால் தாம் அதிகம் சாப்பிடாமல் நுரையாகப் பாலைத் தள்ளி விடக் கூடும்.

பசியைத் தாங்க முடியாமல் உபமன்யு காட்டில் வளர்ந்து கிடந்த இலைகளை எல்லாம் பறித்து சாப்பிடலானார். இதனால் அவர் பார்வையை இழந்து தட்டுத்தடு மாறியவாறே ஆசிரமத்திற்கு திரும்பலானார்.





ஆனால் வழியில் அவர் ஒரு பாழடைந்த கிணற்றில் விழுந்து விட்டார். அவரால் கத்தக் கூட முடிய வில்லை. கிணற்றிலிருந்து வெளியே வரவும் முடிய வில்லை. இருள் சூழ்ந்தது.

பசுக்கள் பழக்கப் பட்டதால் ஆசிரமத்திற்குப் போய்ச் சேர்ந்தன. ஆனால் உபமன்யு வராதது கண்டு தௌம்யர் அவரைத் தேடக் கிளம்பினார்.





தௌம்யர் கிணற்றில் உபமன்யு விழுந்திருப்பது கண்டு நடந்ததை விசாரித்துத் தெரிந்து கொண்டார். அவர் உபமன்யுவிடம் தேவ வைத்தியர்களான அசுவினி தேவர்களைப் பிரார்த்திக்கும்படிக் கூறினார்.



உபமன்யுவும் அவ்வாறே செய்ய அசுவினி தேவர்கள் இருவரும் அவன் முன்தோன்றி ஒரு அப்பத்தைக் கொடுத்து சாப்பிடச் சொன்னார்கள். உபமன்யுவோ "என் குருவின் அனுமதி இல்லாமல் இதைச் சாப்பிடமாட்டேன்" என்றார்.



தேவர்கள் மகிழ்ந்து உபமன்யுவை தௌம்யரின் முன் கொண்டு போய் நிறுத்தினார்கள். தௌம்யரும் அப்பத்தைச் சாப்பிட அனுமதிக்கவே உபமன்யுவும் அதனைச் சாப்பிட்டார். மறுநிமிடம் அவருக்கும் பார்வை கிடைத்து விட்டது. உடலும் நன்கு தேறி விட்டது. அசுவினி தேவர்களும் தௌம்யரும் அந்த உத்தம சீடரை ஆசிர்வதித்தார்கள்.



# அவிட்சிதன்

அவிட்சிதன் கரந்தமன் என்ற மன்னனின் மகன். அவன் பிறந்ததும் சோதிடர்கள் ''இந்தக் குழந்தையை துஷ்ட கிரகங்கள் பார்க்கவில்லை'' எனக் கூறி அவிட்சிதன் எனப் பெயர் வைத்தார்கள்.

கரந்தமனின் தந்தை மக்களைத் துன்புறுத்திய மன்னன். எனவே மந்திரிகளும் மக்களும் சேர்ந்து அவனை நாட்டை விட்டே விரட்டி கரந்தமனை அரசனாக்கினார்கள். கரந்தமன் தன் தந்தை போல இல்லாமல் எல்லோருக்கும் பொருளை எல்லாம் வாரிவாரி வழங்கி பொக்கிஷத்தையே காலி செய்து விட்டான். இது கண்டு மற்ற அரசர்கள் கரந்தமனின் நாட்டின் மீது படை எடுத்து வந்து அவனைக் காட்டிற்கு விரட்டினார்கள். ஆனால் கரந்தமன் தன் படைகளை ஒன்று திரட்டி இழந்த நாட்டை வென்று மீட்டான். அவிட்சிதன் நல்ல சக்தி உள்ளவன். பல அரசகுமாரிகளைச் சுயம்வரத்தில் மணந்து மனைவிகளாக அடைந்தான். விசாலி என்ற அரசகுமாரியின் சுயம்வரத்தின் போது அவன் மீது விழுந்து அரசகுமாரர்கள் அக்கிரமமான முறையில் தாக்கி தோற்கடித்தார்கள். ஆனால் விசாலி அவிட்சதனை தவிர வேறு யாரையும் மணக்கச் சம்மதிக்கவில்லை. சுயம்வரம் நின்று போயிற்று.

இதற்குள் கரந்தமன் தன் மகனை அக்கிரம முறையில் தோற்கடித்த அரசகுமாரர்களைத் துரத்தி அடித்து அவிட்சிதனை அவர்களிடமிருந்து மீட்டான். விசாலி அவிட்சிதனை மணந்து கொள்வதாகக் கூறினாள். ஆனால் அவன் கண் எதிரே தோற்றதால் அவன்

அவளை மணக்க விரும்பவில்லை. கரந்தமன் அவீட்சிதனை தன்னோடு அழைத்துச் சென்றான். ஆனால் விசாலியை விரும்பிய அவன் பிரம்மச்சாரி போன்ற வாழ்க்கையை நடத்தலானான். விசாலியும் அவீட்சிதனை அடையும் நோக்கத்தோடு காட்டில் போய் தவம் செய்யலானாள்.

அவீட்சிதனை எப்படியும் மீண்டும் இல்வாழ்வில் புகுத்த வேண்டுமென்று எண்ணி அவனது தாய் ஒரு விரதம் எடுத்து யார் எதைக் கேட்டாலும் அவீட்சிதன் கொடுத்தாலே அந்த விரதபலன் தனக்குக் கிட்டும் எனக் கூறினாள். அவீட்சிதனும் யார் எதைக்கேட்டாலும் கொடுப்பதாக வாக்களித்தான். அப்போது கரந்தமன் அவீட்சிதனிடம் தனக்குப் பேரனைப் பெற்றுத் தரும்படி கேட்டான்.

ஒரு நாள் அவீட்சிதன் வேட்டையாடக் காட்டிற்குப் போன போது யாரோ பெண் ஒருத்தி ''நான் அவீட்சிதனின் மனைவி. என்னைக் காப்பாற்றுங்கள்'' என்று கத்துவது அவன் காதில் விழுந்தது.

அவீட்சிதன் இதென்ன என ஆச்சரியப்பட்டு ஓடி ஒரு ராட்சஸனிடம் அகப்பட்ட பெண் ஒருத்தியைக் காப்பாற்றி அந்த ராட்சஸனையும் கொன்றான். அது கண்டு தேவபுருஷர்கள் அவனைப் பாராட்டி ''என்ன வரம் வேண்டுமோ கேள்'' என்றார்கள்.

அவனும் ''என் தந்தைக்குப் பேரன் வேண்டுமாம். எனக்கு மகன் பிறக்க வரம் அளியுங்கள்'' என்றான். அவர்களும் ''ஆகா! இவள் வாயிலாக நீ ஒரு மகனை அடைவாய்'' என்றார்கள்.

அது கண்டு அவன் திகைக்க அவர்களும் "திகைக்காதே. இவள் தான் நீ விரும்பிய விசாலி. உன்னைக் கணவனாக அடையவே தவக்கோலம் பூண்டாள்'' எனக் கூறி அவர்களை ஆசீர்வதித்து விட்டுச் சென்றார்கள்.






# தன் வினை தன்னையே சுடும்!

ஒரு பாகவதர் கதா காலட்சேபம் செய்து கொண்டிருந்தார். அவர் ''ஒருவன் ஒரு கெடுதலைச் செய்தால் அது அவனுக்கு கெடுதலாக வந்து முடியும். பெரியோர்கள் தன் வினை தன்னைச் சுடும் என்று சும்மாவா சொன்னார்கள்?'' என்று கூறிக் கொண்டிருந்தார்.

அதைக் கேட்டுக் கொண்டிருந்த மாடன், காடன், தோடன் என்ற மூன்று திருடர்கள் ''ஏய்! இன்று நாம் இந்த பாகவதரின் வீட்டிற்கு போய் அங்குள்ள நகை பாத்திரங்களைத் திருடலாம்'' என பேசிக் கொண்டு அன்றிரவே பாகவதரின் வீட்டில் கன்னம் வைத்து எல்லா விலையுயர்ந்த பொருள்களையும் மூட்டையாகக் கட்டி எடுத்துக் கொண்டு வந்தார்கள்.

மூவரும் அவற்றை வெகு தூரம் எடுத்துப் போய் ஓரிடத்தில் புதைத்து வைத்து விட்டு ''இதை இன்னும் ஒரு வாரம் கழித்து எடுத்துப் பங்கு போட்டுக் கொள்ளலாம்'' எனக் கூறித் தனித் தனியே பிரிந்து போனார்கள்.

ஆனால் அப்போது ஒவ்வொருவன் மனதிலும் அந்த மூட்டையை மற்ற இருவருக்கும் தெரியாமல் தானே எடுத்துப் போய் விட வேண்டும் எனத் தோன்றியது. எனவே மாடன் சற்று தூரம் போனதும் ஒரு பாழடைந்த கிணற்றைக் கண்டு அதில் இறங்கி மறைந்துக் கொண்டான். காடன் சற்று தூரத்தில் ஒரு வீட்டில் செங்கல் குவியலுக்குப் பின்னால் உட்கார்ந்து கொண்டான். தோடனும் இது போல ஒரு புதரின் பின் ஒளிந்து கொண்டான்.

சற்று நேரமானதும் காடன் கொஞ்சம் செங்கல்களை எடுத்து

லாவண்யா

மூட்டையாகக் கட்டிக் கொண்டு முன்பு திருடி வந்து பொருள்களைப் புதைத்து வைத்த இடத்திற்குப் போனான். அங்கே அவன் அந்த செங்கல் மூட்டையை ஓரமாக வைத்து, குழி தோண்டி புதைத்து வைத்த மூட்டையை எடுத்துக் கொண்டு வேகமாக ஓடி ஒரு கிணற்றினுள் விட்டெறிந்தான்.

அது மாடன் ஒளிந்திருந்த கிணறு. மூட்டை மாடனின் தலை மீது பலமாகப் பட்டு அவனைக் கிணறிலுள்ள சேற்றினுள் தள்ளி அமுத்தவே அவன் திக்குமுக்காடி நினைவிழந்து கிடந்தான்.

காடன் செங்கல் மூட்டையைப் புதைக்க வந்த போது புதரின் மறைவிலிருந்து வந்த தோடன் தன் கைத்தடியால் ஓங்கி காடனின் தலை மீது அடித்து விட்டு செங்கல் மூட்டையைத் தாம் திருடி வந்த மூட்டை என எண்ணித் தூக்கிக் கொண்டு கட்டடத்தை நோக்கி ஓடினான். காடன் நினைவிழந்து விழுந்தான். அப்போது கட்டடத்திற்குக் காவல் காத்த காவலாளி யாரோ ஒருவன் ஓடுவது கண்டு 'திருடன்' 'திருடன்' எனக் கத்தித் தன் தடியால் தோடனின் காலில் ஓங்கி ஒரு அடி கொடுத்தான். தோடனின் கால் ஒடிய அவன் கீழே விழுந்தான். காவலாளி தோடனைத் செங்கல் திருடியவன் என்று போலீசாரிடம் ஒப்படைத்தான்.

போலீசார் மறு நாள் காலை கீழே விழுந்து கிடந்த காடனைக் கண்டு கைது செய்து விசாரிக்க அவன் எறிந்த பை பற்றிய விவரம் தெரிந்தது. அவர்கள் பாழடைந்த கிணற்றிற்குப் போய் அதில் இருந்த பையையும் மாடனையும் வெளியே எடுத்தனர். மாடனையும் கைது செய்து கொண்டு போயினர். பாகவதருக்கு அவருடைய பொருள்கள் திரும்பக் கிடைத்தன. திருடர்களுக்கு தண்டனை கிடைத்தது.





# வந்தாயா வழிக்கு!

வேலனிடம் இரண்டு எருதுகள் இருந்தன. ஒன்றின் பெயர் மலையன் மற்றதன் பெயர் கொம்பன். மலையன் நன்கு வேலை செய்யும். கொம்பனோ எந்த வேலையும் செய்யாமல் முரண்டு செய்யும். ஆனால் வேலன் கொடுக்கும் தீவனத்தை மட்டும் வயிறு முட்டச் சாப்பிடும்.

வேலன் கொம்பனை வழிக்குக் கொண்டுவரத் திட்டமிட்டான். மலையனோடு இரட்டை மாட்டு வண்டியிலும், கமலை அடித்து கிணற்று நீர் இறைப்பதிலும், ஏர் உழுவதிலும் ஒத்துழையாத கொம்பனைத் தனியாக்கி சில வேலைகளில் ஈடுபடுத்த அவன் ஏற்பாடு செய்தான்.

முதலில் செக்காட்டும் சொக்கனிடம் அவன் கொம்பனை விட்டான். சொக்கனும் இரண்டு நாட்கள் கொம்பனைத் தனியாகவே செக்கில் கட்டி சுற்றி வரச் செய்தான். இரண்டு நாட்களுக்கு வெயிலில் ஓய்வு ஒழிச்சல் இல்லாமல் கொம்பன் சுற்ற வேண்டியதாயிற்று. மாலையில் தலை சுற்றப் படுத்து விட்டது. தன் கஷ்டத்தைச் சொல்லிக் கொள்ள மலையன் கூட அங்கு இல்லை. எப்படியோ இரண்டு நாட்கள் கழிந்தன.

மூன்றாவது நாள் வேலன் கொம்பனை மாட்டு வண்டி மாணிக்கத்திடம் கொடுக்க அவன் அதனைத் தன் ஒற்றை மாட்டு வண்டியில் பூட்டி ஓட்டலானான். முழு பாரத்தையும் கொம்பனே இழுக்க வேண்டி வந்தது. கட்டிலிருந்து விடுவித்து அப்படியும் இப்படியும் நகரக் கூட முடியவில்லை. அப்படியே இரண்டு நாட்கள் அது கஷ்டப்பட்டுக் கொண்டிருந்தது.

சீதா சுப்பிரமணியம்

அதற்குப் பிறகு வேலன் மேட்டாங்காட்டை உழுவதற்கு கொம்பனைக் காளியப்பனிடம் கொடுத்தான். காளியப்பனும் இரண்டு நாட்கள் அதனைத் தனியாகவே நிலத்தை உழவைத்தான். அதற்குப் பிறகு ஆழமான கிணறிலிருந்து கமலை நீர் இழுக்க வேண்டியதாயிற்று. கிணற்றின் கரையிலிருந்து சற்று தூரம் வரைக் கயிறை இழுக்க தோல் கமலையில் தண்ணீர் வந்து வெளியே விழும் மறுபடியும் கிணறின் கரைக்கு வரும் போது கமலை கிணற்றினுள் போகும். இப்படி இரண்டு நாட்கள் அது வேலை செய்ய வேண்டியதாயிற்று. அதன் பிறகு களத்து மேட்டில் அறுவடை செய்து போட்ட கதிரை மிதித்து தானியத்தை வேருக்கும் வேலையை கொம்பன் இரண்டு நாட்களுக்குச் செய்ய வேண்டியதாயிற்று.

இப்படியெல்லாம் வேலை செய்தும் கொம்பனுக்கு வேலன் தீவனம் கொடுத்தது போல மற்றவர்கள் கொடுக்கவில்லை. அரை வயிறு கால் வயிறு தான் நிரம்பும்படிக் கொடுத்தார்கள்.

இதையெல்லாம் பார்த்த கொம்பன் தான் வேலனிடம் இருந்து கொண்டு வேலை செய்வதே மேல் எனத் தெரிந்து கொண்டது. வேலையும் அதிகமில்லை. வேலையைப் பகிர்ந்து கொள்ள மலையனும் இருக்கிறது. வேலனும் நல்ல தீவனம் கொடுப்பவன்.

எனவே மறுபடியும் வேலன் கொம்பனைத் தன் வேலைகளில் ஈடுபடுத்தியபோது முரண்டு செய்யாமல் மலையனுடன் அது ஒத்துழைத்து எல்லா வேலைகளையும் செய்யலாயிற்று. வண்டி இழுத்தல், ஏர் உழுதல் ஆகியவற்றை மலையனோடு சேர்ந்து உற்சாகமாகச் செய்யவே வேலனும் கொம்பன் கடைசியில் ஒருவழியாகத் திருந்தியது கண்டு மிகவும் மகிழ்ந்து போனான்.



# திகைக்காதே!

இல்லூர் என்ற ஊரில் நாராயணன் என்ற வைத்தியர் இருந்தார். அவரது பேச்சும் வைத்தியமும் மக்களைப் பெரிதும் கவர்ந்தது. அதனால் அவருக்குப் போட்டியாக கோவிந்தனால் செல்வாக்கைப் பெற முடியவில்லை.

நாராயணனுக்குத் திடீரென நோய் கண்டது. அவர் படுத்த படுக்கையாக ஆனார். அவர் தம் மகனுக்கு வைத்தியம் கற்றுக் கொடுத்திருந்தாலும் அவரைப் போலத் திறமை பெற்றவனல்ல. ஆனாலும் அவர் தன் மகனையே தனக்கு வைத்தியம் செய்யச் சொன்னார்.

நாராயணன் இறந்து விட்டால் தானே ஊரின் பெரிய வைத்தியராகி விடலாம் என்று எண்ணினான் கோவிந்தன். அவன் ஒரு நாள் நாராயணனைப் பார்க்க வந்தான். அவன் வந்த எண்ணத்தைப் புரிந்து கொண்ட நாராயணன் எழுந்து உட்கார்ந்து கொண்டு ''பார் கோவிந்தா. என் என் மகனின் வைத்தியத்தால் என்னால் எழுந்து உட்கார முடிந்தது. எனக்குப் பின் அவன் என்னைப் போலவே வைத்தியம் செய்வான்'' என்றார். கோவிந்தன் கொஞ்ச நேரம் பேசி விட்டுப் போய் விட்டான்.

அப்போது நாராயணன் தன் மகனிடம் ''ஏன் திகைத்துப் போனாய்? இந்தப் பயல் வந்ததோ எனக்குப் பிறகு தானே வைத்தியன் ஆக வேண்டும் என்று. ஆனால் என் பதில் அவனை ஊரை விட்டே போக வைத்து விடும்'' என்றார்.





# கொள்ளிப்பிசாசுகள்

ரங்கன் தன் மகளுக்குக் கல்யாணம் செய்யத் தீர்மானித்தான். அவன் மகாக் கஞ்சன். தன் ஊரில் கல்யாணத்தை நடத்தினால் ஊரார் எல்லோரும் சாப்பிட வந்து விடுவார்களே எனப் பயந்து தன் ஊரிலிருந்து சற்றுத் தள்ளி உள்ள பனையூரில் கல்யாணம் நடத்த முடிவு செய்தான்.

அவன் கல்யாண ஏற்பாடுகளை முன்னதாகச் செய்யத் தன் மகனை முதலில் பனையூருக்கு அனுப்பி விட்டுக் கல்யாணத்திற்கு முதல் நாள் வண்டி கட்டிக் கொண்டு தன் மனைவியுடனும் மகளுடனும் இன்னும் இரண்டொரு நெருங்கிய உறவினர்களையும் கூட்டிக் கொண்டு கிளம்பினான்.

சாதாரண நாளாக இருந்தால் அவர்கள் புறப்பட்ட வேளையிலிருந்து அன்று இரவிற்குள்ளாகவே பனையூருக்குப் போய்ச் சேர்ந்து விடலாம். ஆனால் அன்று ஒரே மழை. மேலும் வண்டியில் பூட்டிய எருதுகளில் ஒன்று சற்று நொண்டி நொண்டி நடந்தது. இதனால் வண்டி இருட்டிய போதும் பாதி வழி கூடக் கடக்கவில்லை.

அன்றிரவு தங்களுக்காகத் தன் மகன் சமையல் செய்து வைத்திருப்பதெல்லாம் வீணாகுமே என்ற கவலை ரங்கனை வாட்டியது. வண்டியோ சேற்றிலும் பள்ளத்திலும் ஆடி ஆடி மெதுவாகப் போய்க் கொண்டிருந்தது. வழியில் அது மயானத்தின் ஓரமாகப் போயிற்று. இதே சமயம் வண்டியின் ஒரு சக்கரம் பள்ளத்தில் இறங்கி சேற்றில் பதிந்து கொண்டது.

வண்டியில் இருந்தவர்கள் கீழே இறங்கி வண்டியைத் தள்ளிப்

காசி. விசாலம்

பார்த்தார்கள். ஆனால் சேற்றில் சக்கரம் இன்னமும் பலமாகச் சிக்கிக் கொண்டதேயொழிய வண்டி நகரவில்லை.

இதே சமயம் பலத்த சத்தம் ஏற்படுவது கேட்டு ரங்கன் வண்டியின் கூட்டைப் பார்த்தான். அதன் மீது யாரோ குதித்து ஆடுவது கண்டு ரங்கன் ''யார் நீங்கள்?'' என்று கேட்டான்.

அதற்கு ''நாங்கள் குள்ளப் பிசாசுகள். நீங்கள் ஏன் இந்த மயானத்திற்கு வந்தீர்கள்?" என்று பல குரல்கள் கேட்டன. ரங்கனும் துணிச்சலோடு ''நாங்கள் ஒன்றும் மயானத்தைத் தேடி வரவில்லை. கல்யாணத்திற்குப் போய்க் கொண்டிருக்கிறோம்'' என்றான்.

உடனே அவை ''கல்யாணமா! வடை, பாயசம், அப்பளம் எல்லாம் இருக்குமே. வாருங்கள் நாமும் இவர்களோடு போகலாம்'' என்று கூறிக் குதித்தன. ரங்கனோ ''எப்படிப் போவது? இந்த வண்டிதான் சேற்றில் அகப்பட்டுக் கொண்டு விட்டதே'' என்றான்.

உடனே அவை ''நாங்கள் வண்டியை எடுத்து விடுகிறோம். ஆனால் கல்யாணத்திற்கு எங்களையும் அழைத்துப் போக வேண்டும்" என்றன. ரங்கனும் ''ஓ! முதலில் வண்டியை இந்த இடத்திலிருந்து நகர்த்தி விடுங்கள்'' என்றான்.

குள்ளப் பிசாசுகளும் ''சரி. எல்லோரும் வண்டியில் ஏறிக் உட்காருங்கள்'' என்று கூறியவாறே



மேலே இருந்து கீழே குதித்தன. ரங்கனும் அவனது குடும்பத்தவரும் வண்டியில் ஏறி உட்கார்ந்தனர். குள்ளப் பிசாசுகள் வண்டியைத் தள்ளி விட, வண்டியும் வேக வேகமாகச் செல்லலாயிற்று.

அப்போது ரங்கனின் மனைவி ''ஊரார் வர வேண்டாம் என்றீர்களே. இப்போது பிசாசுகளைக் கூட்டிப் போகிறீர்களே கல்யாணத்திற்கு'' என்று தாழ்ந்த குரலில் கேட்டாள். ரங்கனும் ''பேசாமல் இரு. நாம் அந்த ஊர் போய்ச் சேரும் போது விடிந்தும் போய் விடும். இந்தப் பிசாசுகளும் மறைந்து போய் விடும்'' என்றான்.

அதற்கு அவன் மனைவி ''இந்த வண்டி போகும் வேகத்தைப் பார்த்தால் இன்னும் அரை மணி நேரத்தில் பனையூர் போய்ச் சேர்ந்து விடுவோம் போலிருக்கிறதே. இந்தப் பிசாசுகளுக்கு எப்படிச் சாப்பாடு போடுவது?'' என்றாள். ரங்கனோ ''நீ வாயை மூடிக் கொண்டு இப்போது தூங்கு. அப்படிச் சீக்கிரம் போய் விட்டால் வண்டியைப் பனையூர் காளி கோவிலின் முன் நிறுத்தி ''எல்லோரும் உள்ளே போகலாம்'' என்பேன். பிசாசுகள் பயந்து ஓடி விடும் தெரியுமா?'' என்று கூறித் தானும் கண்ணை மூடிக் கொண்டான். சற்று நேரத்தில் எல்லோரும் தூங்கி விட்டார்கள். வண்டி போவது மட்டும் தெரிந்தது.

அவர்களெல்லாம் கண் விழித்த போது நன்கு விடிந்து விட்டது. ஆனால் வண்டி மட்டும் முன் தினம் சேற்றில் அகப்பட்ட இடத்தில் மயானத்தருகிலேயே இருந்தது.

அப்போது ரங்கன் ''பார்த்தாயா? நீ தொண தொணவென்று பேசி என் திட்டம் என்ன என்று வரவழைத்தாய். அதைக் குள்ளப் பிசாசுகள் கேட்டு வண்டியை இங்கே கொண்டு வந்து விட்டுப் போய் விட்டன'' என்றான் முகம் கோணியவாறே.





# குருட்டு நம்பிக்கை

வெள்ளியூர் வள்ளியப்பன் அயல் நாடுகளுக்குப் போய் பல ஆண்டுகள் வியாபாரம் செய்து நிறையப் பணம் சம்பாதித்துக் கொண்டு ஊர் திரும்பினான். அவனுடைய நண்பன் லட்சுமணன். லட்சுமணன் அந்த ஊரிலேயே பெரிய பணக்காரன். ஆனால் இப்போது வள்ளியப்பனிடமோ அவனிடம் இருப்பதை விடப் பல மடங்கு பணம் இருந்தது.

லட்சுமணனைச் சந்தித்து வள்ளியப்பன் வெகு நேரம் பேசிக் கொண்டிருந்தான். லட்சுமணன் தன் வீட்டிற்குக் குமர நிலயம் என்று பெயர் வைத்திருப்பது கண்டு ''இந்தக் குமரன் யார்?'' என்று கேட்டான். லட்சுமணனும் ''என் இளைய மகன் குமரப்பன். மூத்த மகன் பழனியப்பன். குமரப்பன் பிறந்ததிலிருந்து எனக்கு நல்ல அதிர்ஷ்டம். எதைத் தொட்டாலும் விளங்கி வருகிறது. அதனால் அவன் பெயரில் இந்த வீட்டைக் கட்டினேன்'' என்றான்.

அது கேட்டு வள்ளியப்பன் "அப்படியானால் பழனியப்பன்?" என்று கேட்க லட்சுமணன் ''பாரேன். பத்து வயதாகியும் மக்குப் போல இருக்கிறான். குமரப்பனுக்கு ஆறு வயதுதான். எவ்வளவு சுட்டிகையாக இருக்கிறான் தெரியுமா?'' என்று குமரப்பனையே புகழ்ந்தான்.

வள்ளியப்பனுக்கு இப்படி லட்சுமணன் நினைத்தது பிடிக்கவில்லை. ஏனெனில் அவன் அதிர்ஷ்டத்தை விட உழைப்பில் அதிக நம்பிக்கை வைத்திருப்பவன். இப்படியே விட்டால் அதிர்ஷ்டசாலி என்று இறுமாந்து குமரப்பனும் கெடுவான், தனக்கு அதிர்ஷ்டமே இல்லை என்று பழனியப்பன்

ஜானகி சுந்தரம்



பார்க்கச் சென்றான். அப்போது வள்ளியப்பன் ஏதோ கவலையாக இருப்பது போலத் தோன்றவே லட்சுமணன் ''ஏன் கவலையாக இருக்கிறாய்?'' என்று கேட்டான்.

வள்ளியப்பனும் ''நான் இது வரை வியாபாரத்தில் நஷ்டமே அடைந்ததில்லை. ஆனால் இப்போது பல லட்ச ரூபாய்கள் மதிப்புள்ள சரக்குகளோடு என் கப்பல் மூழ்கி விட்டதாம். ஒரு வேளை நீ நினைப்பது போல, உன் மூத்த மகனின் துரதிர்ஷ்டம்தான் இப்படிச் செய்ததோ?'' என்றான்.

அதைக் கேட்ட லட்சுமணன் மன வருத்தம் அடைந்தான், ஆனாலும் நண்பனுக்கு ஆறுதல் கூறி விட்டுப் போனான். மேலும் சில நாட்கள் கழிந்தன. ஒரு நாள் வள்ளியப்பன் லட்சுமணனின் வீட்டிற்கு வந்து ''என்னமோ போ! என் மனைவிக்கு உடம்பே சரியாக இல்லை. வைத்தியர்களால் கூட என்ன வியாதி என்று கண்டு பிடிக்க முடியவில்லை. எல்லாம் உன் மகன் அடி எடுத்து வைத்தது தான் காரணம். உன் மகன் என் வீட்டிற்கு வந்ததிலிருந்து எல்லாம் நஷ்டமும் கஷ்டமுமே ஏற்பட்டு வருகிறது'' என்றான்.

அதைக் கேட்ட லட்சுமணன் எரிச்சலோடு ''என் மகன் என்னிடம் இருந்த போது இப்படி

நினைத்து மனம் ஒடிந்து போவான். இப்படி நடக்க விடக் கூடாது என்று வள்ளியப்பன் தீர்மானித்துக் கொண்டான்.

லட்சுமணன் மனதில் ஏற்பட்ட இந்த பிரமையைப் போக்க வள்ளியப்பன் "பார் லட்சுமணா, எனக்கு குழந்தை குட்டி இல்லை. நானும் என் மனைவியும் மட்டுமே இருக்கிறோம். உன் மகன் பழனியப்பனை என்னிடம் விட்டு வை. என் மனைவிக்கும் பொழுது போகும்'' என்றான். லட்சுமணன் சந்தோஷத்தோடு வள்ளியப்பனுடன் பழனியப்பனை அனுப்பினான்.

கொஞ்ச நாட்களாயின. ஒரு நாள் லட்சுமணன் வள்ளியப்பனைப்

யெல்லாம் எனக்கு நஷ்டமும் கஷ்டமும் வரவில்லையே. நீதான் அவனை அழைத்துப் போனாய். உனக்கு நஷ்டம் ஏற்பட்டது என்றால் அதற்கு வேறு ஏதாவது காரணம் இருக்கலாம். உன் மனைவிக்கு நோய் என்றால் அது வந்ததற்கும் ஏதாவது காரணம் இருக்கும். என் மகன் பழனியப்பன் வந்ததுதான் இதற்குக் காரணம் என நீ நினைப்பது மூட நம்பிக்கை. என் மகனை உடனே என்னுடன் அனுப்பி விடு'' என்றான்.

அதைக் கேட்ட வள்ளியப்பன் சந்தோஷப்பட்டு ''சரி, வா என்னுடன் இப்போதே. உன்னோடு அனுப்பி வைக்கிறேன்'' என்றான். லட்சுமணனும் உடனே வள்ளியப்பனோடு அவன் வீட்டிற்குச் சென்றான்.

ஆனால் லட்சுமணன் வள்ளியப்பனின் வீட்டை அடைந்த போது அந்த வீட்டில் துயரக் குறிகள் எதுவும் இல்லை. பல அலங்காரப் பொருள்கள் பல இடங்களில் வைக்கப்பட்டிருந்தன. வள்ளியப்பனின் மனைவியும் திடகாத்திரமாக ஆரோக்கியத்துடன் அங்கும் இங்கும் நடந்து கொண்டிருந்தாள் அவளது உடலின் மீது விலை உயர்ந்த நகைகள் மின்னிக் கொண்டிருந்தன. அவள் லட்சுமணனை வரவேற்று உபசரித்தாள்.

அங்கு தன் மகன் பழனியப்பனும் முக மலர்ச்சியுடன் அங்கும் இங்கும் போய் வந்து கொண்



டிருப்பதை லட்சுமணன் பார்த்தான். அவன் வள்ளியப்பனை ஏதோ கேட்பவன் போலப் பார்த்தான். ஆனால் வாய் திறந்து கேட்க முடியவில்லை.

வள்ளியப்பனே ''லட்சுமணா! பார்த்தாயா? எனக்கு எந்த நஷ்டமும் ஏற்படவில்லை. என் மனைவியும் உடல் நலத்தோடு இருக்கிறாள்! நான் கூறியபடி எல்லாம் நடந்திருந்தாலும் அவை எல்லாம் உன் மகன் வந்தால்தான் என்று நினைக்கும் அளவிற்கு நான் முட்டாள் அல்ல. நீ உன் இளைய மகனையே புகழ்ந்து மூத்த மகனை அலட்சியப் படுத்தியது கண்டு மனம் நொந்தேன். இதனால் உன் இளைய மகன் கர்வப்பட்டு எதற்கும் உதவாமல் போய் விடுவானென்றும் உன் மூத்த மகனும் மனம் உடைந்து உதவாக் கரையாகி விடுவான் எனவும் எண்ணினேன். இப்படி நடக்க விடக் கூடாது என்பதற்காக உன்னிடம் இரண்டு பொய்களைச் சொன்னேன். நானே ஏதாவது ஒரு கெடுதல் உனக்கு ஏற்பட்டால் உன் இளைய மகன் அது தன் காரணத்தால் அல்ல என நினைத்துப் பேசாமல் இருப்பான். நீயும் மூத்த மகனால் வந்தது என நினைப்பாய். இந்தக் குருட்டு நம்பிக்கையை ஒழிக்கவே நான் இப்படிச் செய்தேன். உன் மனம் மாறி விட்டது. இனி உன் மகனை நீ அழைத்துச் செல்லலாம்'' என்றான்.

லட்சுமணனும் தலை குனிந்தவாறே ''ஆகா! நான் மாறி விட்டேன். ஆனால் முழுமையாக மாற இன்னும் கொஞ்ச நாட்களாகலாம். என் மகன் இங்கேயே இன்னமும் கொஞ்ச நாட்கள் இருக்கட்டும். அவன் இங்கு சுகமாகவே இருப்பது போலத் தெரிகிறது'' என்றான். அவன் மகன் பழனியப்பனும் புன்னகை புரிந்தவாறே நின்றான்.






மகிஷாசுரனைக் கொன்ற பின் தேவி மறைந்து விட்டாள். மகிஷனின் நாட்டை தேவர்கள் சத்துருக்கனன் என்ற சூரியவம்ச அரசனிடம் கொடுத்து அதன் மன்னனாக்கி விட்டுப் போனார்கள்.

உலகம் சுகமாக இருக்கிறது என நினைத்துக் கொண்டிருக்கும் போது மீண்டும் மீண்டும் ராட்சஸர்கள் தலை தூக்கலானார்கள். பாதாள உலகில் சும்பன், நிசும்பன் என்ற சகோதரர்கள் அன்ன ஆகாரம் இல்லாமல் பிரம்மதேவனை நோக்கிக் கடுந்தவம் புரிந்தார்கள்.

பிரம்மாவும் அவர்களது தவத்தைப் பாராட்டி அவர்கள் முன் தோன்றி ''என்ன வரம் வேண்டும்?'' என்று கேட்கவே அவர்களும் ''நாங்கள் எந்த வீரனாலும் கொல்லப்பட முடியாத வரம் கொடுங்கள்'' என்றனர். ஒரு ஆணை கொல்ல முடியாது போனால் பெண்ணால் என்ன செய்துவிட முடியும் என்றே அவர்கள் எண்ணியே அப்படி வரம் கேட்டார்கள். பிரம்மாவும் அப்படிப்பட்ட வரம் கொடுத்து விட்டு மறைந்தார்.

சும்பனும் நிசும்பனும் இப்படி வரம் பெற்று பிருகு முனிவரைத் தம் புரோகிதராக்கிக் கொண்டார்கள். ஒரு நல்ல முகூர்த்தம் பார்த்து மூத்தவனான சும்பன் ராஜ்யாபிஷேகம் செய்து கொண்டு தன் தம்பியான நிசும்பனைத் தன் மந்திரியாக ஆக்கிக் கொண்டான். சண்டன், முண்டன் என்ற மாவீரர்

சும்பனும் நிசும்பனும்



தேவியையும் அவளோடு இருந்த காளியையும் கண்டு ஆச்சரியம் அடைந்தார்கள். அவர்களது இனிய கானத்தைக் கேட்டு மெய் மறந்து போனார்கள். அவர்கள் உடனே போய் கம்பனை வணங்கி ''நம் பூங்காவில் அழகான பெண் ஒருத்தி சிங்கத்தின் மீது அமர்ந்து வந்திருக்கிறாள். அவள் அழகை என்ன என்று சொல்வது! அவளது குரலின் இனிமையையோ வர்ணிக்கவே முடியாது. அவளது இசையில் பிராணிகளும் பறவைகளும் மயங்கிவிட்டன. நீங்களே நேரில் போய்ப் பார்த்து அவளை உமது பட்டத்து ராணி ஆக்கிக் கொள்ளுங்கள். தேவலோகத்தையே கைப்பற்றிய உங்களுக்கு அவள் எல்லா விதத்திலும் ஏற்றவள்'' என்றார்கள்.

இதைக் கேட்ட கம்பன் தன்னருகே இருந்த சுக்கிரீவன் என்ற படைத்தலைவனைப் பார்த்து ''நீ இப்போதே போய் அந்தப் பெண்ணிடம் என்னைப் பற்றிக் கூறி அவளை இங்கே அழைத்து வா. இந்த மாதிரி விவகாரங்களில் முரட்டுத் தனம் காட்டக் கூடாது. நயமாகப் பேச வேண்டும்'' என்று சொல்லி அனுப்பி வைத்தான். சுக்கிரீவனும் பூங்காவிற்குப் போய் அங்கு சிங்கத்தின் மீது அமர்ந்திருக்கும் தேவியை நமஸ்கரித்து ''அம்மணி, எங்கள் கம்பன் தேவர்களையே வென்றவர். மன்மதன் போல அழகானவர். நான் அவருக்காக தூது வந்திருக்கிறேன். உன்னைப் பற்றி அவர் கேள்விப்பட்டு உன் மீது ஆசை கொண்டு விட்டார். எனவே நீ அவரை மணந்து கொண்டு மனைவியாகி பட்டத்து ராணியாகவும் ஆகி விடு'' என்றான்.

தேவி இதைக் கேட்டுப் புன்னகை புரிந்து ''உன் மன்னன் தேவர்களை எல்லாம் ஜெயித்தவன் என்பதைக் கேட்டே அவன் எப்படி இருக்கிறான் என்று பார்க்கவே நான் வந்திருக்கிறேன். ஆனால் ஒரு விஷயம். என்னை



மணக்க விரும்புபவன் முதலில் என்னோடு போர் புரிந்து என்னை வென்றாக வேண்டும். இப்படி வெல்பவனையே நான் மணப்பேன் எனச் சபதம் செய்திருக்கிறேன். எனவே உங்கள் மன்னன் என்னைப் போரில் வென்றால் அவரையே நான் மணக்கிறேன் என்பதைத் போய்த் தெரிவி" என்று கூறினாள்.

அப்போது சுக்கிரீவன் ''அம்மணி, நீங்கள் கும்பனது திரவீர பராக்கிரமங்களைப் பற்றி அறியாமல் பேசுகிறீர்களே. கும்பன் என்ற பெயரைச் சொன்னாலே எல்லோரும் நடுங்குவார்களே. அவரோடு நீங்கள் போர் புரியப் போகிறீர்களா? வேண்டாம். இந்த யோசனையைக் கை விட்டு விட்டு அவரை மணந்து கொண்டு விடுங்கள்'' என்றான்.

அதற்கு தேவி ''நான் செய்துள்ள சபதத்தை நிறைவேற்றியே ஆக வேண்டும். என்னோடு போர் புரிய உன் எஜமானன் தயாராக இல்லையானால் தேவலோகத்தை விட்டுத் தன் உற்றார், உறவினர், பணியாட்கள் எல்லோரையும் அழைத்துக் கொண்டு பாதாள லோகத்திற்குப் போய் விட வேண்டும். இதை இப்படியே உன் எஜமானனிடம் சொல்'' என்று கூறி அனுப்பினாள்.

சுக்கிரீவனும் கும்பனிடம் போய் தேவி கூறியதை அப்படியே சொன்னான். அப்போது கும்பன் தன் தம்பி நிகும்பனைப் பார்த்து ''ஒரு பெண் இன்னொரு பெண்ணைத் துணையாக அழைத்துக் கொண்டு நம்மோடு போர் புரிய வந்திருக்கிறாளாம். நீ போகிறாயா அல்லது நான் போகட்டுமா?'' என்று யோசனை கேட்டான்.

நிகும்பனும் ''நாம் இருவரும் போக வேண்டாம். நாம் தாமிர லோசனனை அனுப்பி அவர்களை வென்று சிறைப்பிடித்து வரச் சொல்லலாம். அப்போது அவள் உன்னைத் தன்னால் கல்யாணம் செய்து கொண்டு விடுவாள்'' என்றான்.

அது கேட்டு கும்பன் மகிழ்ந்து ''பேஷ்! சரியான-யோசனை. இப்போதே தாமிரலோசனை அனுப்புகிறேன்'' எனக் கூறி தாமிரலோசனனிடம் ''நீ போய் அந்த அழகிக்குத் துணையாக உள்ள வனைக் கொன்று அந்த அழகியை தோற்கடித்துச் சிறை பிடித்துக் கொண்டு வா. அவளுக்கு எவ்வித காயமும் ஏற்படக் கூடாது. தெரிந்ததா?'' என்று கூறி அனுப்பினான்.

தாமிரலோசனும் படையோடு போய் தேவியிடம் தன் எஜமானனை மணந்து கொள்ளும்படிக் கூறினான். தேவியோ ''இதோ பார். வீண் பேச்சு எதற்கு? உன் எஜமானனுக்கு சாமர்த்தியமும் சக்தியும் இருந்தால் போரில் என்னை வெல்லட்டும். அப்போது தான் மணம் என்ற பேச்சு. இல்லா விட்டால் அவனும் அவன் தம்பியும் நீயும் பிணங்களாகி விழ வேண்டியதே'' என்றாள்.

தாமிரலோசனுக்குக் கோபம் வந்து விட்டது. அவன் ''ஏய்! வாயை அடக்கு. ஒரேயடியாக மண்டைக் கனத்தால் பேசிக் கொண்டே போகாதே'' என்று கூறி தேவியுடன் போர் புரியலானான். அவனைக் காளி கொன்றதோடு அவனது படையையும்



முழுவதுமாக அழித்தும் விட்டாள். தேவி வெற்றிச் சங்கை எடுத்து ஊதவே அதைக் கேட்ட கும்பன் தாமிரலோசனுக்கு ஏதோ கெடுதல் நேர்ந்து விட்டதென ஊகித்து வெளியே வந்து பார்த்தான். தாமிரலோசன் எங்கே இருக்கிறான் என்றே தெரியவில்லை. அவனது படையும் அழிந்து ஒரே பிணக் குவியலாக இருப்பதை அவன் கண்டான். போரில் உயிர் தப்பியவர்கள் கும்பனிடம் நடந்ததைக் கூறினார்கள்.

கும்பனுக்கு தேவியின் பேரில் ஏற்பட்ட ஆசை பறந்து போயிற்று. தேவியுடன் போர் புரிந்து தான் ஆக வேண்டும் என்ற நிலை ஏற்

பட்டதால் அவன் சண்டனையும் முண்டனையும் போர்க்களத்திற்கு அனுப்பி வைத்தான். அவர்களையும் காளி வெகு எளிதில் கொன்று விட்டாள். அப்போது சும்பன் இரத்தபீஜனை அனுப்பினான்.

இரத்தபீஜனும் தேவியிடம் ''இதோ பார். சண்டை வேண்டாம். நீ சும்பனை மணந்து கொண்டு சுகமாக இரு'' என்று கூறிப் பார்த்தான், தேவியோ ''இதோ பார். நான் போர் புரிய வந்திருக்கிறேன். போரில் சும்பனையும் அவர்களுக்கு உதவும் மற்றவர்களையும் அழிக்கத்தான் போகிறேன். என்னை யாராவது மணக்க விரும்பினால் என்னோடு போர் புரிந்து என்னைத் தோற்கடிக்க வேண்டும் என்ற என் சபதத்தை முன்பே கூறி இருக்கிறேனே. நான் சொன்னது புரியவில்லையா?'' என்றாள்.

அது கேட்டு இரத்த பீஜன் தேவியுடன் போர் புரியலானான். தேவியும் காளியிடம் ''இவனது ரத்தம் தரை மீது விழுந்தால் அங்கிருந்து ஆயிரம் வீரர்கள் வருவார்கள். எனவே இவனது ரத்தம் தரை மீது விழுமுன் அதனை நீ குடித்து விடு'' என்றாள். காளியும் அவ்வாறே செய்து கொண்டிருக்க தேவி இரத்தபீஜனைக் கொன்று வீழ்த்தினாள்.

இரத்தபீஜனும் இறந்தான் என்று கேட்டு சும்பனும் நிசும்பனும் தேவியை எதிர்க்கப் போர்க்களத்திற்கு வந்தார்கள். கடும் போர் நிகழ்ந்தது. தேவி சும்பனையும் நிசும்பனையும் கொன்றாள். தேவர்கள் துயர் தீர்ந்தது. எஞ்சிய ராட்சஸர்களை ஒன்றும் செய்வதில்லை என்று கூறி தேவி அவர்களை பாதாள லோகத்திற்கு அனுப்பி விட்டாள். தேவர்களும் தாம் இழந்த தேவலோகத்தை மீண்டும் பெற்றார்கள். அவர்கள் தமக்கு உதவி செய்த தேவியை ஸ்தோத்திரம் செய்து வணங்கி நின்றார்கள்.





# இரு திருடர்கள்

நாட்டில் திருட்டுத்தனம் அதிகமாகி விட்டது கண்டு அந்நாட்டு மன்னன் திருடர்களைப் பிடித்து தண்டனை கொடுத்தான்.

அந்நாட்டில் வேலன், கோலன் என்ற இரு திருடர்கள் ஒரு ஊரில் இருந்தார்கள். அவர்கள் அரசனின் தண்டனைகளைக் கேட்டு பயந்து திருட்டுத் தொழிலை விட்டு விட்டு வேறொரு ஊருக்குப் போய் ஒரு பண்ணையாரிடம் வேலைக்கு அமர்ந்தார்கள். வேலனுக்கு மாடுகளை மேய்க்கும் வேலை கிடைத்தது. கோலனுக்கு கிணற்றிலிருந்து நீர் இறைத்துத் தோட்டத்தில் பாய்ச்சும் வேலை.

முதல் நாள் வேலன் மாடுகளை ஓட்டிக் கொண்டு ஊருக்கு வெளியேயுள்ள மேய்ச்சல் நிலத்திற்குப் போனான். மாடுகள் அவன் கட்டிற்கு அடங்காமல் அங்கும் இங்கும் ஓடலாயின. அவற்றைப் பிடித்து வீடு திரும்புவதற்குள் வேலன் பல முறை அங்கும் இங்கும் ஓடி ஓடித் திரிந்து கஷ்டப்பட வேண்டியதாயிற்று.

கோலன் கிணற்றிலிருந்து தண்ணீர் இறைக்க இறைக்க நீரை நிலமே அதிகமாக உறிஞ்சிக் கொண்டது. தோட்டம் முழுவதும் நீரைப் பாய்ச்ச முடியவில்லை.

மாலையானது. வேலன் வீடு திரும்பினான். கோலனும் தோட்ட வேலையை முடித்து விட்டு வந்தான். இரவில் படுத்த போது வேலன் வேண்டுமென்றே ''ஆகா. என் வேலை எவ்வளவு எளிதானது தெரியுமா? மாடுகளைக் கொண்டு போய் மேய்க்க மேச்சல் நிலத்தில் விட்டு விட்டு நான் ஒரு மரத்தடியில் படுத்து விட்டேன். அவை சுற்றிப் போய் மேய்ந்து விட்டு

முகவை முத்துராமன்



மாலையாகும் முன் என் முன் வந்து நின்றன. அவற்றை ஓட்டிக் கொண்டு வந்தேன்'' என்றான்.

கோலனும் ''என் வேலை மட்டும் என்னவாம்? நான்கு குடம் தண்ணீர் தான் விட்டேன். தோட்டம் முழுவதும் பாய்ந்து விட்டது. அப்புறம் மரத்தடியே படுத்துத் தூங்கினேன்'' என்றான்.

அப்போது வேலன் ''அப்படியானால் நீ தானே என் வேலையைப் பார். நான் உன் வேலையைச் செய்கிறேன்'' என்றான். கோலனும் சந்தோஷத்தோடு அதற்கு இணங்கினான். மறு நாள் இருவரும் தம் வேலைகளை மாற்றிக் கொண்டு செய்த போதுதான் ஒருவனை மற்றவன் ஏமாற்றியது தெரிந்தது. ஆனால் வேலன் தோட்ட நீரைப் பாய்ச்சும் போது ஒரு மரத்தடியே எவ்வளவு தண்ணீர் விட்டாலும் ஒரு ஓட்டை வழியாகப் பூமிக்குள் போய் விடுவதைக் கவனித்தான். அன்றிரவு யாருக்கும் தெரியாமல் அங்கு வந்து தோண்டிப் பார்க்கத் தீர்மானித்துக் கொண்டான்.

அன்றைய வேலை முடிந்து இருவரும் படுத்துக் கொண்டார்கள். ஆனால் ஒருவனிடம் மற்றவன் பேசவில்லை. தூக்கம் வராமல் படுத்துக் கொண்டிருந்தார்கள். பாதி ராத்திரியானதும் வேலன் மண்வெட்டியுடன் தான் காலையில் பார்த்த மரத்திற்குப் போய் அதனடியே தோண்டினான்.

வேலன் எழுந்து போனதுமே கோலனும் கொஞ்சம் மெதுவாக நடந்து வந்து வேலன் இருந்த இடத்திலிருந்து சற்று தூரத்தில் மறைந்து நின்று கொண்டு அவனது செயலைக் கவனித்தான்.

வேலன் தோண்டிக் கொண்டே போன போது சற்று நேரத்திற்குப் பின் மண்வெட்டி ஏதோ ஒரு பொருளின் மீது பட்டு 'டங்' கென்ற ஒலியைக் கிளப்பியது. அப்போது கோலன் ஓடி வந்து ''வேலா! என்ன சத்தம் அது?'' என்று அவனிடம் கேட்டான். வேலனோ திடுக்கிட்டான். ஆனா

லும் சமாளித்து "இந்த மரத்தின் வேருக்கு மண் வைத்து அணை கொடுக்கிறேன். சத்தமா? ஒன்று மில்லையே. நான் மண் வெட்டியைக் கீழே போட்ட சத்தம்தான் அது" என்று மழுப்பினான்.

மறுநிமிடமே இருவரும் அங்கிருந்து வந்து தம் படுக்கையில் படுத்தார்கள். வேலன் தூங்கக் கூடாது என முயன்றும் சற்று நேரத்திற்குள் தூங்கி விட்டான்.

அப்போது கோலன் எழுந்து மண் வெட்டியை எடுத்துக் கொண்டு வேலன் மண்ணைத் தோண்டிய இடத்திற்குப் போனான். அவசர அவசரமாகத் தோண்டிப் பார்த்ததில் அவனுக்கு இரண்டு செப்புக் குடங்கள் கிடைத்தன. அவற்றில் தங்க நாணயங்கள் இருப்பது கண்டு உடனே அவற்றை எங்காவது ஒளித்து வைக்க வேண்டுமென எண்ணினான். அருகே ஒரு குளம் இருக்கவே அங்கே கொண்டு போய் நீரின் கீழ் தரைக்குள் புதைத்து வைத்து விட்டுப் பிறகு திரும்பி வந்து தன் படுக்கையில் படுத்து நிம்மதியாகத் தூங்கினான்.

வேலன் வெகு நேரம் தூங்கிய பின் கண் விழித்துக் கொண்டான். உடனே பக்கத்தில் பார்த்து கோலன் தூங்குவது கண்டு எழுந்து மரத்தடிக்கு ஓடினான். அங்கு குழி பறிக்கப்பட்டிருப்பதைக் கண்டு கோலன்தான் அங்கிருந்ததை அகற்றி எங்கோ ஒளித்து வைத்





திருக்க வேண்டும் என்று ஊகித்துக் கொண்டான். இரும்பி வந்து கோலனின் காலைப் பார்த்து அதில் சேறு ஒட்டியிருப்பது கண்டு அவன் குளத்தில்தான் அதை ஒளித்திருக்க வேண்டுமெனத் தெரிந்து கொண்டான். உடனே அருகிலிருந்த குளத்திற்குப் போய்ப் பார்த்தான். ஓரிடத்தில் மட்டும் தவளைகளும் மீன்களும் போகாதது கண்டு அங்கு அவன் கை விட்டுத் தோண்டினன். அவனுக்குக் கோலன் புதைத்து வைத்த இரு செப்புக் குடங்களும் கிடைத்தன. அவற்றை எடுத்துக் கொண்டு அவன் தன் ஊருக்கு ஓடலானன். கோலன் கண் விழித்துத் தன் பக்கத்தில் வேலன் படுத்திராதது கண்டு முதலில் குளத்திற்கு ஓடித் தான் புதைத்து வைத்த குடங்கள் இருக்கின்றனவா என்று தேடிப் பார்த்தான். அவை இல்லாது போகவே வேலன்தான் அவற்றை எடுத்துக் கொண்டு ஊருக்குப் போய் இருக்க வேண்டும் என்று ஊகித்துக் கொண்டு அவனும் ஊரை நோக்கி ஓடினன்.

சற்று தூரத்தில் வேலன் செப்புக் குடங்களைத் தூக்கிக் கொண்டு போவதைக் கோலன் பார்த்து குறுக்கு வழியில் அவனுக்கு முன் போய்விட்டான். அவன் வேலன் வரும் வழியில் ஓரிடத்தில் ஒரு புது செருப்பையும் அங்கிருந்து நூறு கஜதூரத்தில் மற்ற புதுச் செருப்பையும் போட்டு விட்டு அங்கேயே ஒளிந்து நின்றான்.

வேலன் முதலில் வழியில் ஒரு புது செருப்பைப் பார்த்து விட்டு ''ஒன்றுதானே கிடக்கிறது. இதை எடுத்துப் போய் என்ன செய்வது?'' என யோசித்து முன் சென்றான். ஆனல் சற்று தூரம் போனதும் இன்னொரு செருப்பும் இருப்பதைக் கண்டான். சுற்றிலும் பார்த்து யாரும் இல்லை எனக் கண்டு தான் சுமந்து வந்த குடங்களை அங்கே வைத்து விட்டு ஒரு செருப்பை எடுத்துக் கொண்டு மற்ற செருப்பையும் எடுத்து வர

பின் நோக்கிச் சென்றான். அப்போது சட்டெனக் கோலன் தான் மறைந்திருந்த இடத்திலிருந்து வந்து கீழே வைக்கப்பட்டிருந்த செப்புக் குடங்களைத் தூக்கிக் கொண்டு தன் வீட்டிற்கு ஓடினான். வேலன் திரும்பி வந்து தான் வைத்த குடங்கள் காணாமல் போனது கண்டு அது கோலனின் வேலைத்தனம்தான் எனக் கண்டு கொண்டு நேரே ஊருக்குப் போய் கோலனின் வீட்டிற்குப் போனான்.

கோலனின் வீட்டிலிருந்து அழுகைக் குரல் கேட்டது. கோலனின் உடல் தரை மீது கிடத்தப்பட்டு துணியால் போர்த்தப்பட்டிருந்தது. கோலனின் மனைவியும் மகன்களும் கோலன் இறந்து விட்டதாகக் கூறித் தேம்பிப் புலம்பி அழுதார்கள். வேலனும் அவர்களோடு சேர்ந்து அழுது விட்டு ''கோலன் என்னிடம் தான் இறந்தால் தன் உடலைக் கருவேல முள் மீது வைத்துக் கருவேல முட்களையும் குச்சிகளையும் போட்டு எரிக்கச் சொன்னான். அவன் விருப்பப்படியே செய்யலாம்'' எனக் கூறி அவனது உடலைத் தூக்கிக் கொண்டு ஓடினான்.

ஓரிடத்தில் அடர்ந்த வளர்ந்திருந்த கருவேலமுள் செடிகளின் மீது வேலன் கோலனின் உடலைப் 'பொத்'தென்று போட்டான். கோலனின் உடலில் நீண்ட கருவேல முட்கள் கூரிய கத்திகளைப் போலக் குத்தின. கோலன் உடனே ''வேலா! என்னைத் தூக்கு. நான் திருடியதைப் பங்கு போட்டுக் கொள்ளலாம். இரண்டு செப்புக் குடங்களில் ஒன்று உனக்கு. மற்றது எனக்கு. சரியா?'' என்று கூறினான்.

வேலனும் கோலனைத் தூக்கி விட்டு வீட்டிற்கு அழைத்துப் போனான். கோலன் அவனுக்கு ஒரு செப்புக் குடத்தைக் கொடுத்தான். பிறகு இருவரும் திருடாமல் சுகமாக வாழ்ந்தார்கள்.



# போட்டோ வாக்கியப் போட்டி :: பரிசு ரூ. 25

**இந்தப் போட்டியின் வெற்றி பெற்ற தலைப்புகள் 1980 மார்ச் மாத இதழில் வெளியிடப்படும்**



Devidas Kasbekar





Anant Desai

- ★ தலைப்புகள் ஒரு வார்த்தையிலிருந்து நாலைந்து வார்த்தைகளுள் இருக்கலாம். இரு தலைப்புகளுக்கும் தொடர்பு இருக்க வேண்டும்.
- ★ ஜனவரி 10 தேதிக்குள் போட்டிக்கான தலைப்புகள் எமக்கு வந்து சேர வேண்டும்.
- ★ எம்மிடம் வந்து சேர்ந்த தலைப்புகளில் நாம் சிறந்ததாகக் கருதும் தலைப்புகளுக்கு ரூ. 25 பரிசு. இது இரு தலைப்புகளுக்கும் சேர்ந்ததே.
- ★ தலைப்புகளை தபால் கார்டில் மட்டுமே எழுதி அம்புலிமாமா 'போட்டோ வாக்கியப் போட்டி' சென்னை-26 என்ற முகவரிக்கு அனுப்பவும்.

---

## நவம்பர் மாதப் போட்டி முடிவு

முதலாவது போட்டோ: புற இருள் அகற்றும் சக்தி
இரண்டாவது போட்டோ: மன இருள் அகற்றும் பக்தி

பரிசு பெற்றவர்: திருமதி சசிகலா நீலகண்டன்,
பாரதி நகர், அலிகட்-202001.

பரிசுத் தொகை ரூ. 25 ம் இம்மாதக் கடைசிக்குள் அனுப்பி வைக்கப்படும்.

Printed by B. V. REDDI at Prasad Process Private Ltd., and Published by B. VISWANATHA REDDI for CHANDAMAMA CHILDREN'S TRUST FUND (Prop. of Chandamama Publications) 2 & 3, Arcot Road, Madras-600 026 (India). Controlling Editor: NAGI REDDI.

**Results of Chandamama—Camlin Colouring Contest No. 11 (Tamil)**

*1st Prize:* Nicy Jose, Madras-10. *2nd Prize:* Vijayalakshmi, Madras-1. *3rd Prize:* P. Geetha, Madras-34. *Consolation Prizes:* V. Muthusamy, Tiruchy-8; T. Nageeswari, Arkonam; T. Pushpa, Jothi Rani, Madras-24; P. R. Mari, Ahmedabad-380 008; Prasad, Madras-8; R. Baskaran, Pondicherry-11.

